இட்டப்பா மலர்-5.

கவிச்சக்கரவர்த்தி

# சுப்ரமண்ய பாரதி சரிதம்





ஆக்கியோன்

ஆக்கூர். அனந்தாச்சாரி

(இட்டப்பா சரிதம், டால்ஸ்டாய் சரிதம்,
பக்தவிஜயம் ஆசிரியர்)





இட்டப்பா மலர்ப் பிரசுராலயம்
செங்கோட்டை



காபிரைட்.] 1936. [அணு 6.



59-1

மகா மகோபாத்யாய

டாக்டர். உ. வே. சாமிநாதையர்

# முகவுரை

ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொரு வகையில் தமது ஆயுள் நாளைச் செலவிட்டு உலகத்தோரால் நன்மதிப் புற்றுப் புகழ்பெற்றோர் பலர். அவரவர்க்கு இருந்த சிறப்பியல்புகள் யாவை, அவரவர்களுடைய காலப் போக்கு எப்படி யிருந்தது, பிறருடைய நன்மையின் பொருட்டு அவரவர்கள் பட்ட கஷ்டங்கள் யாவை என்று பிறர் தெரிந்து கொள்வதற்கு அவரவர்களுடைய ஜீவ்ய சரித்திரங்களே கருவியாக உள்ளவை. எட்டயபுரம் ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியாரை உலகம் நன்கறியும். பாரதி யென்றால் அவரே யென்று குறிப்பிடும் பெருமை வாய்ந்தவர் அவர். பெரியோர் முதல் பாலர் ஈறாக எல்லோராலும் நன்கறியப்பட்ட தகுதி வாய்ந்தவர். எனக்கு மிக்க பழக்க முள்ளவர்.

தமிழில் சில நூல்களை எழுதி வெளியிட்டுள்ள ஆக்கூர். ஸ்ரீ. அநந்தாசாரியா ரவர்கள் பாரதியாரின் சரித்திரத்தை இப்போது எழுதி வெளியிட்டிருக்கிறார்கள். அது போற்றற் குரியதே.

பாரதியாரின் வாழ்க்கை வரலாறுகளை ஸாமான்ய ஜனங்களும் நன்கு அறியுமாறு இப் புத்தகம் அமைந்திருக்கிறது. இதனை அன்பர்கள் வாங்கிப் படித்து ஆதரிப்பார்க ளென்று நம்புகின்றேன்.

தியாகராஜ விலாசம்
திருவல்லிக்கேணி
4-8-36

இங்ஙனம்,
வே. சாமிநாதையர்.

பிசகொன்று மில்லை. இவர் ஓர் சிறந்த கவியே.

அத்தகைய பெருமை வாய்ந்த சிறந்த தேசியக் கவியின் ஜீவிய சரித்தைத் தமிழர் அறிய வேண்டியது அவசிய மெனக்கருதி அதை வெளியிட வெகு நாளாக யான் ஆவல் கொண்டிருந்தேன். இப்போதுதான் அதற்கேற்ற சந்தர்ப்பம் கிடைத்தது.

எனக்கு ஏற்கனவே தெரிந்த தகவல்களுடன் சில நண்பர்கள் மூலமும் முக்கியமாக பாரதியாரின் மனைவியாரான ஸ்ரீமதி செல்லம்மாள் அவர்கள் மூலமும் சில விஷயங்களை அறிந்து கொண்டு இந்நூலை வெளியிட்டுள்ளேன். பாரதியாரின் வாழ்நாளில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் இன்னும் எவ்வளவோ இருக்கும் என்பது நான் அறிந்ததே. அவைகளை நண்பர்கள் எழுதி யனுப்புவார்களாகில் அடுத்த பதிப்பில் சேர்த்துக் கொள்ளலாம் என்ற நம்பிக்கையுடன் இப்பதிப்பை

59-1



இப்போது வெளிக்கொணர்ந் துள்ளேன்.

செந்தமிழ்க் கிழவர் மகா மகோ பாத்யாயா டாக்டர். உ. வே. சாமிநா தையர் அவர்களும், 'லோகோபகாரி' பத்திராதிபரும், பழந்தேச பக்தரும், பாரதி நண்பருமான ஸ்ரீமான். பரலி. சு. நெல்லையப்பர் அவர்களும் மன முவந்து இச் சிறிய நூலுக்கு முக வுரையும் சிறப்புரையும் கொடுத் தருளியதற்காக அவர்களுக்கு நான் மிகவும் கடமைப்பட் டுள்ளேன்.

இதெல்லா வற்றையும் விட கம்ப ராமாயண ஆராய்ச்சி யாளரும் தேச பக்தருமான எனது நண்பர் ஸ்ரீ ஜம தக்னி அவர்கள் தமது ராஜீய வேலை களையும் சில காலம் வரை நிறுத்திக் கொண்டு இந் நூலை வெளிக்கொணர் வதில் எப்போதும் போல் அவர் பேருதவி புரிந்ததற்காக என்றும் நான் நன்றி செலுத்த வேண்டிய வனே. அவரது உதவி யில்லாவிடின்

இவ்வளவு சீக்கிரமாக இந் நூல் வெளி வந்திருக்காது என்பது திண்ணம்.

ஸ்ரீமதி செல்லம்மா பாரதி அவர்கள் தமது கணவரின் வாழ்நாளில் நடந்த சில ருசிகரமான சம்பவங்களைச் சொல்லியும், அவரது படங்களைப் பிரசுரிக்கக் கொடுத்தும் எனக்குப் பேருபகாரம் செய்ததற்காக எனது வந்தனத்தை தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். இந் நூலில் ஏதேனும் பிழைக ளிருப்பினும் தமிழ்மக்கள் பொறுத்தருளி மென்மேலும் ஊக்க மளிக்க வேண்டு மென்பதே எனது பிரார்த்தனை.

செங்கோட்டை.
6-8-36.

ஆக்கூர். அனந்தாச்சாரி.

## கவிச் சக்கிரவர்த்தி

# ஸ்ரீ சுப்பிரமண்யபாரதி சரிதம்

கவி யென்பவன் மக்களின் உயிர், நாட்டின் உயிர், உலகத்தின் உயிர். உடலின் உள்ளே இன்பம், சோகம், காதல் என்றவைகளுடன் உயிர் விளங்கு கின்றது போல ஓர் கவியும் உலக இயக்கத்தில் முக் காலத்தையும் எடுத்துச் சொல்பவனே. கவிதை என்பது உள்ளுணர்ச்சி. ஓர் கவியின் கவித்திற மையை விமர்சனம் செய்யக் கவியின் உள்ளத்தில் புகுந்தவனுல் தான் முடியும். கவிதையின் சுவையை உண்டு அதை அனுபவித்தே தீரவேண்டும். கவிகள் எத்தேசத்தின ராயினும் உலகம் முழுவதற்கும் சொந்தமானவர்களே.

பாரதியார் தமிழ்க் கவிகளில் சிறந்த வீரர், ஞானி, புலவர். எளிய நடையில் உயரிய கருத்துக் களைப் பதியவைக்கும் சக்தி தமிழ்ப் புலவர்களிலே அவர் ஒருவரிடம் தான் இருந்தது. புதிய உணர்ச்சி மலிந்து விளங்க அதற்குப் பொருத்தமான புதிய நடைகளையும் புதிய யாப்புக்களையும் உண்டு பண்ணி யிருக்கின்ருர். தங்களது புலமைத் திறமையைக் காட்டுவதையே தொழிலாகக் கொண்டு கரடுமுர டான தமிழில் சில புலவர்கள் கவிகள் இயற்றி வந்த

னர், இயற்றி வருகின்றனர். பாரதியாரோ அவ்வா றல்லாமல் சிறுவர்களும் அறிந்து அனுபவிக்கும் வண்ணம் எழுதி யிருக்கின்ருர். அவரது செய்யுள் வீரச் சுவையுடன் ததும்பி நிற்கின்றன. பாரதி ஓர் ஒப்பற்ற தேச பக்தர். நாட்டைத் தம் முயிரினும் இனிமையதென ஓம்புபவர். அவரது நாடு அடிமைப் பட்டு மக்கள் ஆண்மை இழந்து குன்றி இருப்பதுமே அவரது கவியின் போக்கை நிர்ணயித்தது. ஆதலின் சிருங்காரம் முதலியன அவரது கவியை அவ்வள வாகக் கைப்பற்ற இயலாது வீரத்திற்கும், ததும்பும் தேச பக்திக்கும் இடம் அளித்து விட்டது.

நாட்டிற்கு அவ்வப்போது வேண்டுவதென்ன என்பதை உணர வேண்டியது ஓர் கவியின் கடமை. தான் வாழும் நாட்டின் அக் காலத்திய உணர்ச்சி யைத் தனக்குச் சொந்தமாக்கிக் கொண்டு அதைக் கவிதை என்னும் அமுதத்தால் தெளிப்பது கவியின் தொழில். கவி என்பவன் ஓர் தீர்க்கதரிசி. எக் காலத்திற்கும் வேண்டிய பொருள் அவனுடைய கவி யில் திகழும். ஆயிரம் வருடங்களுக்குப் பின்னர் மக்கள் பயில்வாராகில் அவர்களுக்கு வேண்டியதும் அதில் இருக்கும். ஒருவன் கவிதையை எடுத்து ரசிக்கும்போது அவனுக்கு இன்றியமையாத பொ ருள் அதில் இருந்தால் கவிதையைக் கீழே வைக்க மாட்டான். படிப்பவை தனக்குரிய அத்யாவசிய மானவை யெனக் கருதி முழுதும் பயில ஆரம்பிப் பான்.

கவிதையை அரசியல் துறையில் மாத்திரம் அல்லாமல் தொழில், சமுதாயம், ஞானம், மதம், வாழ்க்கைக்கு அவசியமான சகல துறைகளிலும் செலுத்தினர். கம்பீரத் தோற்றம், செய்கை, அஞ்சாநெஞ்சம் அனைத்தும் அவரது வீரத்தைக் காட்டும். அவரது வீரச் சொல்லே தமிழ் நாட்டில் தற்போது ததும்பி வழியும் தேச பக்திக்கு விதையாகும். தேசாபிமானம் என்ற உணர்ச்சி ரத்தத்தில் கலந்து விட்டால் என்ன வேணுமானுலும் செய்ய முடியும். எஞ்சின் ஓடுவதற்கு நீராவி முக்கியம்போல் தேச பக்தி பரப்புவதற்குத் தேசிய பாட்டுகள். பாட்டு என்பது இனிமை. பல காரியங்கள் அதனுல் சாதித்துக் கொள்ள முடியும். ஒரு பிறவிக் கவிக்குப் பாட்டுணர்ச்சி பிறக்கும்போதே உண்டாகின்றதெனலாம். தமிழ் மொழியில் உயிருள்ள பாடல்கள் பாடிய ஒப்பற்ற புலவராய்ப் பாரதியார் விளங்குவதற்கு இஃதுமொரு முக்கியமான காரணமாகும்.

ஊதுகின்ற குழலோசை வழியே
மருண்டுமான் கணங்கள் மேய்கை மறந்து
மேய்ந்த புல்லும் கடைவாய் வழிசோர
இரண்டு பாலும் துலுங்காப் புடைபெயரா
எழுது சித்திரங்கள் போல நின்றனவே

கண்ணன் ஊதுகின்ற புள்ளாங் குழல் சப்தம் கேட்டு மான் கூட்டங்கள் மருண்டு புல் மேய்வதை மறந்து கடைவாய் வழியே மேய்ந்த புல்லும் சோரும்படி

ஓரடியும் பெயராமல் எழுதிய சித்திரங்கள்போல் நின் றனவாம். பாட்டின் சக்தி அத்தகையதா யிருக் கிறது. அதனுல் தான் பாரதியார் பிரம்மாவைக் குறித்துச் சொல்லும் போது,

ஆனாலும் நின்றன் அதிசயங்கள் யாவினுமே
காணமுதம் படைத்த காட்சிமிக விந்தையடா

என்ருர்.

நம் நாடு முன்னிருந்த உன்னத நிலையை இழந்து ஹீன ஸ்திதியில் இருக்கும் சமயம் கம்பர், வள்ளுவர், இளங்கோ போன்ற புலவர்களைப் பெற்றெடுத்த நந் தமிழ் நாட்டில் வீரங் குன்றித் தேசபக்தியின்றி இருக்குந் தருவாயில் 'ஜயமுண்டு பயமில்லை' என்ற கலங்கா நம்பிக்கை ஊட்டும் கோஷத்துடன் வீர பாரதியார் அவதரித்தார். இத்துணை பாயிரத்தோடு, சரித்திரத்திற்குச் செல்லலாம்.

## பாரதி அவதாரம்

முற்காலத்தில் தமிழ்ப் புலவர்களுக்கும் கல்வி மான்களுக்கும் புகலிடமா யிருந்தது எட்டையா புரம் சமஸ்தானம். ஓர் சமயம் சின்னசாமி அய்யர் என்பவர் சமஸ்தான வித்வானுக இருந்து வந்தார். அவர் திருநெல்வேலி ஜில்லா பிரபலஸ்தர்களில் ஒரு வர். அபாரமான புத்தியுள்ளவர். நற்குண நற் செய்கைக ளுடையவர். தர்க்கம் வியாகரணங்களி லும் கணித சாஸ்திரத்திலும் கை தேர்ந்தவர். கலா சாலை செல்லாமலே ஆங்கிலத்திலும் வல்லுநரானர்.

சகல விதத்திலும் சிறந்தவரான இவரது சிநேகத்தைப் பலர் விரும்ப லாயினர். அவரது மதிப்பு பெரிதும் உயர்ந்திருந்தது. ஏழைகளின் அன்பர். அன்னார்களுக்குத் தேவையான உதவியை அவ் வப்போது அறிந்து செய்து வந்தார். அப்பேர்க்கொத்தவருக்கு அழகிலும் குணத்திலும் சிறந்தவராக லக்ஷ்மீ தேவி மனைவியராக வாய்த்தார். அச்சதிபதிகளுக்கு 1882-ம் ஷ கார்த்திகை மாதம் சுப தினத்தில் நந் நேரத்தில் எட்டையா புரத்தில் அவதரித்தார் நம் பாரதியார்.

## தாய் மரணம்

குழந்தை தவழ்ந்து விளையாடிப் புன்னகை செய்வதைக் கண்டும் பேசும் மழலைச் சொற்களைக் கேட்டும் ஆனந்தித்தார் லக்ஷ்மீ தேவியார். எனினும், பிற் காலத்தில் தமது மைந்தன் பெற விருக்கும் புகழைக் கேட்டு பரமானந்த மடைய அவர் கொடுத்து வைக்காமல் பாரதியாருக்கு ஐந்து பிராயம் இருக்கும் போதே விண்ணுல கெய்தினர். தாயில்லையே எனக் குழந்தை ஏங்காம லிருக்கும் வகையில் சின்னசாமி அய்யர் குழந்தைக்குத் தாய்க் கடனைத் தாமே ஆற்றிக் குழந்தையை மிக்க அருமையாக வளர்த்துப் பாதுகாத்து வந்தார்.

## இளமைக் கல்வி

சின்னசாமி அய்யர் தமது குழந்தைக்கு யுக்த வயதில் அக்ஷராப்பியாசம் செய்து வைத்தார். தந்

தையோ ஓர் பெரிய தமிழ்ப் பண்டிதர். அவர் உத்தியோகம் பார்க்கும் எட்டையாபுரம் சமஸ்தானமோ தமிழ்வித்வான்கள் நிறைந்த இடம். தந்தையார் தனயனைத் தம்முடன் சமஸ்தானத்திற்கு அழைத்துப் போவது வழக்கம். அதனால் பாரதியாரைச்சுற்றி எப்போதும் தமிழ்த் தாய் தாண்டவ மாடிய வண்ணமாயிருந்தாள். அவருக்குத் தமிழில் இயற்கைத் திறமை இருப்பதைக் கண்டு கொண்டு தந்தையும் கம்பர், வள்ளுவர், தாயுமானவர் முதலியோரின் நூல்களைக் கற்றுக் கொடுத்தார். ஏழு வயதில் கவிகளை வெகு விரைவாக யாதொரு கஷ்டமு மின்றி இயற்றுவதைக் கண்டு தமிழ் வித்வான்கள் பெரிதும் ஆச்சரிய மடைந்து ஆசி கூறினர். ஒன்பதாவது பிராயத்தில் தாமே கவி தொடுக்கவும் ஆரம்பித்தார். பெரிய புலவர் கூட்டம் இதைக் கண்டு பிரமித்தது. இவர் தமது பதினோராவது ஆண்டில் புலவர்கள் கூடிய பெருஞ் சபையினர் கொடுத்த அடிகளைக் கொண்டு கவிகளை அர்த்த புஷ்டி யுள்ளனவாய் அழகு பெறப் பூர்த்தி செய்தார். படிப்பினால் மட்டும் ஒருவனுக்குக் கவித் திறமை ஏற்படாது. பிறப்பிலேயே அது அமைந்திருக்க வேண்டும் என்று அப்புலவர்கள் அறிந்து வழுவற்ற இவரது கவிகளைக் கண்டு ‘பாரதியார்’ என்ற பட்டப் பெயரும் சூட்டி அழைக்க ஆரம்பித்தனர்.

இவர் ஆங்கிலப் பள்ளியிலேயே கல்வி கற்று வந்தார். தந்தையிடத்தன்றித் தமிழில் வேறு ஆசிரி

யரிடத்தில் பிரத்தியேகமாகப் பாடங் கேட்டது கிடையாது. தந்தையாரே தமிழ் பயிற்சி விஷயத்தில் மிக்க கவனம் செலுத்தி வந்தார். அவர் தமிழையன்றி இதர இலக்கியத்திலும் கணிதம் முதலிய சாஸ்திரங்களிலும் அதிசயமான வகையில் முதன்மையா யிருந்துவந்தார். அவர் யாருடனும் அதிகமாகப் பேசமாட்டார். மற்ற குழந்தைகளோடு சேர்ந்து வீண் விளையாட்டு விளையாடுவதிலும் பிரியங் கொள்ளமாட்டார். அவருக்கு இரண்டொரு சக பாடிகள் உண்டு. அவர்களுடன் தான் எப்போதும் காலங் கழிப்பார். சில சமயம் ஜனநடமாட்டமில்லாத கோயில் மூலைகளிலும் தோட்டம் துறவுகளிலும் தனியா யிருந்து காலங்கழிப்பார். ராமாயணம் மகா பாரதம் முதலிய இதிகாச புராணங்களில் அளவற்ற பிரேமை யுடையவர்.

அவர் பள்ளிச் சிறுவனா யிருந்தபோது ஓர் நாள் அவரது கவித் திறமையைப்பற்றிக் கேள்விப் பட்ட அவரது தமிழ்ப் பண்டிதர் அவரை வாழை-கமுகு இரண்டையும் உட்பொருளாகக் கொண்ட சிலேடைக் கவி ஒன்று இயற்றுமாறு சொன்னார். பண்டிதர் சொல்லி வாய் மூடும் முன்னரே செய்யுளைப் பூர்த்திசெய்து பண்டிதரிடம் நீட்டினார். அவர் மிகவும் சந்தோஷமடைந்து, "உன்னைப் பாரதி என்று அழைக்காமல் என்னென்றழைப்பது! அதற்கு வேண்டிய சகல அம்சங்களும் உன்னிடம் சம் பூர்ணமா யிருக்கின்றன" என்றார்.

## விவாகம்

1897-ம் வருடம் ஜூன் மாதம் திருநெல்வேலி ஜில்லா கீழ்க்கடையத்தில் செல்லப்பா அய்யரின் அருமைப் புதல்வி செல்லம்மாளுடன் பாரதியாருக்கு விவாகம் நடந்தேறியது. விவாகத்தின்போது அவருக்கு வயது பதினைந்து. மணமகளுக்கு வயது ஏழு. அத் திருமணத்திற்கென பல வூர்களிலிருந்து விஜயம் செய்திருந்த தமிழ் பண்டிதர்கள் இவரது புலமையைக் கண்டு வியந்தனர்.

## தந்தை வியோகமும் வேற்றூர் போதலும்

பாரதிக்கு விவாகம் முடிந்த ஒரு வருஷத்திற்கெல்லாம் சின்னசாமி அய்யர் சிவலோக ப்ராப்தியானார். பின்னர் பாரதியார் காசிக்குச் சென்று அங்குள்ள உறவினரின் ஆதரவில் ஒரு வருடகாலம் காலம் இருந்துவிட்டுத் திரும்பினார்.

## பண்டிதரின் கர்வத்தை அடக்குதல்

பிறகு திருநெல்வேலி ஹிந்து கலாசாலையில் ஐந்தாவது 'பாரம்' வரைப் படித்தார். அச் சமயம் ஓர் சம்பவம் நடந்தது. சோணாசலம் என்ற ஒருவரும் அவரது குமாரராகிய காந்திமதிநாதப் பிள்ளையும் விசேஷ தமிழ் பயிற்சியுள்ளவரா யிருந்தனர். அடிக்கடி பாரதியார் அன்னார் வீட்டிற்குப் போவதுண்டு. ஓர் நாள் பல புலவர் அங்குக் கூடியிருந்த

சமயம் காந்திமதி நாதப் பிள்ளை மிகவும் இளைரான பாரதியாரை அடக்க நினைத்துப் 'பாரதி சின்னப் பயல்' என்ற அடியைக் கடைசியாக வைத்து ஓர் வெண்பாவைக் கட்டும்படிக் கேட்டார். பிள்ளை தம்மை அவமானப் படுத்தவே இத்தகைய சூழ்ச்சி செய்திருப்பதாக உணர்ந்தார் பாரதியார். அப் பிள்ளைக்குத் தகுந்த புத்தி கற்பிக்க வேண்டுமெனத் தீர்மானித்தார். காலதாமத மின்றி மூன்றும் அடியின் இறுதியில் 'காந்திமதி நாதனை' என்று வைத்து

.............காந்திமதிநாதனைப்
பாரதி சின்ன பயல்

எனப் பாடி முடித்தார். காந்திமதிநாதனைப் பார் அதி சின்னபயல் என்று பொருள் கொண்டிருப்பதை நோக்குக. இதைக் கண்டு காந்திமதிநாதன் .வெட்கித் தலை குனிந்தார். பாரதியார் என்ன செய்யப் போகிறாரோ என்று கவலையுடனிருந்த மற்றவர்கள் வெண்பாவைக் கேட்டு அதிக ஆச்சரியமும் ஆனந்தமும் அடைந்தனர்.

மறுநாள் இவரைக் கலாசாலைத் தமிழ் பண்டிதர் வகுப்பில் ஓர் கேள்வி கேட்டார். உயர்ந்த இடத்தில் (காலரியில்) உட்கார்ந்திருந்த பாரதியார் பதில் சொல்லாது மௌனமா யிருந்தார். இவர்மீது கோபமும் பொறாமையும் கொண்டவராய்ப் பண்டிதர் "மேகம்போல் நீர் கவிகள் பொழிவதாக ஊர் முழுதும் புகழ்கின்றார்கள். உயர்ந்த இடத்திலும் இருக்

கின்றீர்! காளமேகம் போல் பொழியாமல் சும்மா இருப்பதேன்?'' எனக் கேலியாகப் பேசினர். பாரதியாருக்கோ கோபம் மூண்டது. தமது ஆசனத்தில் உட்கார்ந்தபடியே அவர், ''பண்டிதராயிருந்தும் தங்களுக்கு மேகத்தின் சாமான்ய குணம் கூடத் தெரியாமலிருக்கிறதே! காளமேகம் தனக்கு இஷ்டமான போதுதான் மழை பொழியும். பண்டிதரின் உத்திரவுக்குப் பயந்து எங்கேனும் பெய்யுமோ? இதை அறிந்து கொள்ள முடியாமல் என்னைப் பேசும்படி கட்டாயப் படுத்தும் உங்களைப் போன்ற ஒருவரிடத்தில் எப்படிப் பரிவு காட்டுவது?'' என்று விடை பகர்ந்தார். இதைக் கேட்ட மாணாக்கர்கள் கை கொட்டி நகைத்தனர். பண்டிதர் வெட்கமடைந்து ''ஆழம் தெரியாமல் இறங்கி விட்டோமே! என்ன மதியீனம்!'' என்று தம்மைத்தாம் நொந்து கொண்டார். இவ்வாறே பல சந்தர்ப்பங்களிலும் தம்மை எதிர்க்க வந்த புலவர்களை அதிக சாமர்த்தியமாய் அடக்கித் தமது அபாரமான புத்தியையும் தமிழ் திறத்தையும் காட்டி வந்தார்.

## அலஹாபாத் சர்வ கலாசாலை

தமக்கு ஆதரவும் துணையும் இல்லாமற் போகவே காசியிலிருந்த அத்தையார் அழைத்தவுடன் மறுக்காது 1901-ம் வருடம் அங்குச் சென்றார். ஆங்குத் தமிழ்பாடம் கிடையாது. புதிதாகச் சமஸ்கிருதம் படிக்க நேரிட்டது. எனினும், அதே

வருஷத்தில் மேற்கண்ட சர்வ கலாசாலையில் பிர வேசப் பரீக்ஷைக்கு ஆஜராகி முதல் தரத்தில் தேறி னார். அப்படி யிருந்தும் மேற்கொண்டு படிக்க அங்குச் சௌகர்யப் படவில்லை. அதே சமயத்தில் எட்டையாபுரம் ஜமீந்தாரிடமிருந்து அழைப்பு வந் தது.

## எட்டையாபுர சமஸ்தான உத்தியோகம்

ஆகையால் உடனே அவர் காசியை விட்டுப் புறப்பட்டு எட்டையாபுரம் வந்து அங்கு இரண்டு வருடகாலம் உத்தியோகம் பார்த்தார். அரண்மனை யில் கிடைத்து வந்த சொற்ப வருவாயைக் கொண்டு காலக்ஷேபம் நடத்தி வந்தார். அச் சமயங்களில் பாரதியார் பாடிய பாடல்கள் அனந்தம். அவை புலவர்களிடையே நிகழும் தமிழ் போட்டியைப் பற்றியும் சமஸ்தானாதிபதியைப் பற்றியவையுமே.

ஓர் நாள் காலை சமஸ்தானாதிபதியும் அங்குள்ள தமிழ் புலவர்களும் காவடிச்சிந்து இயற்றிய அண்ணா மலை ரெட்டியாரைப் பற்றிப் பேசத் தலைப்பட்டனர். பாரதியார் ஆழ்ந்த கருத்துடைய சிறந்த கவிகளைப் புலவர் வியப்புறும் வண்ணம் ஒரு நொடியில் இயற்றி னாலும் ரெட்டியாரைப் போன்று பாமரரும் இன்பம் நுகரும் வகையில் சிந்து போன்ற இசைத்தமிழ் இயற்ற முடியாதெனச் சொன்னார்கள். இச் சம்பா ஷணை காதில் விழுந்ததும் பாரதியார் கலகலவென

நகைத்தார். அங்குள்ள புலவர்களி லொருவர், "கேலிச் சிரிப்பு சிரிப்பதில் பிரயோஜனமில்லை. வீண்பெருமை யேன்? உங்களால் அம்மாதிரி கவி ஒன்று முடியுமானால் செய்து காட்டுங்கள். பார்க்கலாம்'' என்றார். 'அவ்வாறே ஆகட்டும் இன்று மாலைக்குள்' என்று சொல்லிப் பாரதியார் வீடு சென்றார். சொன்னபடியே சூரியன் அஸ்தமிப்பதற்கு முன்னதாகவே சிந்து இயற்றிக் கொண்டு அரண்மனைக் கேகினார். ஆனால், அங்குப் புலவர் எவரையும் காணோம். பாரதியார் மாலையில் சிந்துடன் தயாராய் வருவதாகச் சொன்ன பேச்சை அவர்கள் நம்பாததே காரணம். ஆகையால், அரசர் முன்பு தாமியற்றியதைச் சமர்ப்பித்தார். புலவோர் அழைக்கப்பட்டனர். சிந்துவும் படிக்கப்பட்டது. ரெட்டியாரின் சிந்தை விட எவ்வகையிலும் பாரதியாரின் சிந்து பின் வாங்கியதா யில்லை என்று யாவரும் உணர்ந்தனர். அதன் மேன்மைக்காகவும் சுவைக்காகவும் பாரதியார் மெச்சப்பட்டார். துரதிருஷ்ட வசமாகப் பூர்த்தியான பாட்டு எங்கும் கிடைக்கவில்லை. அச் சிந்தின் கடைசி அடி கீழ் வருமாறு. அது ரெட்டியாரின் 'என்னடி நான் பெற்ற மங்கை' மெட்டில் இயற்றப்பட்டது.

பச்சைத் திருமயில்வீரன்,
அலங்காரன், கௌமாரன் ஒளிர்
பன்னிரு திண்புயப்பாரன், அடி
பாலசுப்ர மணியர்க்கருள்,

அணிமிக்குயர், தமிழைத்தரு
பக்தர்க் கெளிய சிங்காரன்,
எழில்பண்ணு மண்ணுசலத்தூரன்

## பள்ளி உபாத்தியாயமும் பத்திரிகைத் தொழிலும்

எவருக்கும் கட்டுப்படும் சுபாவம் பாரதியாரிடம் இல்லாததின் காரணமாக 1904-ம் வருடம் எட்டையாபுரம் சமஸ்தானத்திலிருந்து விலகிக் கொள்ள நேரிட்டது. பிறகு மதுரை சென்று அங்கு மூன்றுமாத காலம் சேதுபதி உயர்தரப் பள்ளியில் தமிழ் பண்டிதராக இருந்தார். அவருக்கு வேறெத் தொழிலேனும் மேற்கொள்ள வேண்டுமென்ற எண்ணம் மேலிட்டது. சென்னை போதனு முறைக் கல்லூரி 'வைஸ் பிரின்ஸிபாலும்' தமது உறவினருமான லக்ஷ்மண அய்யருக்கு இவ் விஷயத் தைப்பற்றி எழுதினர். லக்ஷ்மண அய்யர் தமது நண்பரொருவர் மூலம் சுதேசமித்திரன் காரியால்யத்தில் பாரதியாருக்கு வேலை ஏதாவது கிடைக்குமா வென விசாரித்தார். அவ்வமயம் உதவி ஆசிரியர் ஸ்தானம் காலியாக விருப்பதை அறிந்து பாரதியாரைச் சென்னைக்கு வரவழைத்து மிகுந்த சிபார்சின் பேரில் சுதேசமித்திரனில் வேலைக் கமர்த்தினர். சிறந்த தேச பக்தியும், மதி நுட்பமும், அரசியல் திறமையும் வாய்ந்த ஜீ. சுப்பிரமணிய அய்யர் அப்போது சுதேசமித்தி

ரன் பத்திரிகையைத் திறம்பட நடத்திவந்தார். அவர் பாரதியாரிடம் பிரத்தியேகமான அன்பு செலுத்தி உதவி ஆசிரியராக வைத்துக்கொண்டார்.

உத்தியோகத் தொழில் முறைபாடுகளுக்குக் கட்டுப்பட்டு அடங்கி நடப்பவர் நம் பாரதியன்று. சுதந்திர உணர்ச்சி உடையவ ரன்றோ! அரியேறு போல் காரியாலயத்திற்குள் நுழைவார். ஆசனத்தில் அமர்வார். இஷ்ட மிருந்தால் எழுதுவார். பார்ப்பவர் இவர் எழுதாம லிருக்கின்றாரே என்று வெறுப்பும் கொள்வர். பேனா எடுத்தாலோ யாராலும் தடுத்தற்கரிய ஆற்று வெள்ள நிலையை எய்துவார். சிறிது நாழிகையிலேயே பக்கம் பக்கமாக வரைந்து தள்ளுவார். அளந்து வைத்த வார்த்தைகள், மாற்ற முடியாத மொழிகள், சிறந்த கருத்துகள், புதுமை திகழும் எண்ணங்கள் நிறைந்த அற்புதமான வியாசங்களாக முடியும். எனினும், அவர் வெகு நாள் 'மித்திரனி'ல் இருக்க வில்லை. இரண்டரை வருடமே வேலை பார்த்தார்.

பின்னர், திருவல்லிக்கேணி திருமலாச்சாரியாருக்குச் சொந்தமான அச்சுக்கூடத்தில் 'இந்தியா' வாரப் பத்திரிகையை ஆரம்பித்து வெளியிட்டு வந்தார். 'பாலபாரதம்' என்ற பத்திரிகையும் நடத்தலானர். அப் பத்திரிகைகளில் வெளிவரும் தலையங்கங்களும் கட்டுரைகளும் மக்கள் மனதைக் கவர்ந்தன. தாம் அவ்வப்போது இயற்றும் தேசிய கீதங்

களை அப் பத்திரிகை வாயிலாக வெளியிட்டு வந்தார். சகல வழிகளிலும் அப் பத்திரிகைகளுக்கு ஜனங்களிடையே மதிப்பு அதிகமாகவே தலை சிறந்து விளங்கின. தமிழ் நாடு முழுதும் தேசீய உணர்ச்சியை உண்டு பண்ண சாதனமா யிருந்தன. 'ஜன்மபூமி' பத்திரிகைக்கும் பாட்டெழுதிக் கொடுத்து வந்தார்.

## அரசியல் வாழ்க்கை

அவரது பாட்டுகளில் புத்தம் புதிய கருத்துக்கள் பதிந்து கிடந்தன. நாடு நம்முடையது என்பதையும் ஒற்றுமை அவசியம் என்பதையும் தமிழ் மக்கள் நன்கு உணரும்படிச் செய்து சுதந்திர தாகத்தை உண்டு பண்ணின. உணர்ச்சி ததும்பும் வகையால் ஆயிரக்கணக்கான இளைஞரும் மாணாக்கரும் இவர் பாட்டுகளையே பாடத் தலைப்பட்டனர். ஜனங்கள் கண் முன்பாக இவர் ஓர் சிறந்த பாடகராகவும், எழுத்தாளராகவும், உபன்யாசகராகவும் புலப்பட்டார். அபார சக்தி வாய்ந்தவரென அறிந்து பெரிதும் ஜனங்கள் மதிக்கலாயினர். ஓர் சமயம் ஜீ. சுப்பிரமணிய அய்யர் தலைமையின் கீழ் கடற்கரையில் ஓர் மாபெருங் கூட்டம் நடந்தது. நெவில்ஸன் என்ற ஆங்கிலப் பத்திரிகைக்காரரும் அங்கு பிரசன்னமா யிருந்தார். பாரதியார் அச்சமயம் பாடியதைக் கேட்டு விட்டு தனது நூலில் அவரைப்பற்றி மிகவும் சிலாகித்து எழுதி யிருக்கின்றார். காலஞ் சென்ற வி. கிருஷ்ணசாமி அய்யர் ராஜீய அபிப்பிரா

யங்களில் வேறுபட்டிருந்தாலும் பாரதியாரின் பாடல் களினால் பரவசமாகி ஆயிரக்கணக்காய் அச்சிட்டு இலவசமாக ஜனங்களுக்கு விநியோகித்து வந்தார்.

இச்சமயம் வங்காளப் பிரிவினை சம்பந்தமாய் நாடு முழுதும் தேசியக் கிளர்ச்சி ஏற்பட்டிருந்தது. தேசமெங்கும் வாலிபர்கள் தேசசேவை செய்ய விறுகொண் டெழுந்தனர். அவ் வாலிபர்களில் பாரதியாரும் ஒருவர். அவர் தமது கவிகளினால் உணர்ச்சியை உண்டுபண்ணித் தேசிய விடுதலையில் அனைவரும் ஆர்வம் கொள்ளுமாறு செய்து வந்தார். 1905-ல் காசியில் கோகலே தலைமையில் நடந்த காங்கிரஸிலும், அடுத்த வருடம் தாதாபாய் நௌரோஜி தலைமையில் கல்கத்தாவில் நடந்த காங்கிரஸிலும் தீவிர வாதிகளுக்கும் மிதவாதிகளுக்கும் போர் நடந்தது. லோகமான்ய பால கங்காதர திலகரைத் தலைவராகக் கொண்டு ஓர் கக்ஷியை ஸ்தாபித்துக் கொண்டனர் தீவிர வாதிகள். சென்னை வக்கீல் களும் மிதவாதிகளும் பாரதி கோஷ்டியுடன் சேராமல் பத்திரமாய் விலகி யிருந்தனர். அச் சமயம் பிபினசந்திர பாலர் பிரசங்கம் செய்யப் பெஜவாடாவிற்கு வந்திருந்தார். அதை யறிந்த சென்னை தீவிர வாதிகள் தங்கள் சார்பாகப் பாரதியாரைப் பெஜவாடாவிற்கு அனுப்பிப் பாலரை அழைத்து வரச் செய்தனர். பாலர் சென்னை வந்து அமிதவாதக் கொள்கைகளை விவரித்து அநேக அருமையான பிரசங்கங்கள் நிகழ்த்தினர். அதன் பயனாகச்

சென்னை ஜனசங்க மென்றதோர் ராஜீய சபை தோற்றுவிக்கப்பட்டது. காலஞ்சென்ற ஜீ. சுப்பிரமணிய அய்யரும், டாக்டர், நஞ்சுண்ட ராவும் வாலிபர்களை உற்சாகப்படுத்தி அச் சங்க வளர்ச்சிக்காகப் பேருதவி செய்து வந்தனர்.

இவ்வாறிருக்கத் தேசிய உணர்ச்சியை உண்டு பண்ணி வந்த தேசபக்தர்கள் மீது அடக்கு முறையைப் பிரயோகித்தது அரசாங்கம். வடக்கே லாலா லஜபதிராய் நாடு கடத்தப்பட்டார். பிபின சந்திர பாலர் சிறையி லிடப்பட்டார். இந் நிலையில் சூரத் காங்கிரஸ் கூடலாயிற்று. பாரதியாரும், தூத்துக்குடி சிதம்பரம் பிள்ளையும் அடங்கிய சென்னை வாலிபர் கூட்டமொன்று அக் காங்கிரஸுக்குச் சென்றது. மிக்க கலவரத்துடன் அக் காங்கிரஸ் கலையவே அத் துயரைப் போக்க பாரதியார் தமது கீதங்கள் பாடி ஹாஸ்யமாகப் பேசினர்.

1908-ம் வருடம் திருநெல்வேலியில் நடந்த குழப்ப சம்பந்தமாகத் தூத்துக்குடி சிதம்பரம் பிள்ளையும், சுப்பிரமணிய சிவாவும் கைது செய்யப்பட்டனர். பாரதியார் 'கோர்ட்டுக்'குச் சென்று அவ் வழக்கில் சாக்ஷியமும் கொடுத்தார். சிதம்பரம் பிள்ளைக்கும், திருநெல்வேலி 'கலெக்டரு'க்கும் நடந்த சம்வாதமாகவே 'நாட்டி லெங்கும் சுதந்திர வாஞ்சையை நாட்டினய்' என்ற கீதத்தை பாரதியார் இயற்றினர். சுரேந்திரநாத் ஆரியா சென்னை மூர்





மார்க்கெட்டில் ராஜத்வேஷப் பிரசங்கம் செய்ததாகக் குற்றம் சாட்டப்பட்டுச் சிறையில் அடைக்கப்பட்டார். பாரதியாரின் 'இந்தியா' பத்திரிகையின் பிரசுரகர்த்தாவும் ராஜத்வேஷத்திற்காகக் கைது செய்யப்பட்டார். அதி யற்புதமாய் பிரகாசித்து வந்த அப் பத்திரிகை அத்துடன் நின்று விட்டது. பாரதியாரை ஆசிரியராகக் கொண்ட அப்பத்திரிகைக்கும் இக்கதி வந்ததே! அப்போது அவருக்கு வயது இருபத்தாறு. அதற்குள்ளே ஒருவன் தன் நாட்டுக்கு என்ன செய்ய வேண்டுமோ அவ்வளவையும் செய்து முடித்தார். இதுவே அவரது வாழ்நாளில் மிகமிக முக்கியமான பாகம்.

## புதுச்சேரி யடைதல்

பிரிட்டிஷ் இந்தியாவில் இருந்திருந்தால் அடக்குமுறைக்கு ஆளா யிருந்திருப்பார். அதனல் நம் பாரதியார் புதுச்சேரிக்கு அடைக்கலமானார். நாற்பெரும் சுவரால் ஆகும் சிறையை விரும்பவில்லை யெனினும் அவருக்குப் புதுவையோ கடுஞ்சிறையாக மாறியது. சென்னை வாசத்தில் இருந்த உற்சாகம் குன்றியது. வறுமை நோய் முதலிய துன்பங்களுக்கு ஆளானார். பலவிதத்திலும் இவருக்குச் சொல்லொணுக் கஷ்டமே சம்பவித்தது. ஆதரிப்பார் யாருமின்றிப் பல நாள் பட்டினியும் கிடக்க நேரிட்டது. புதுவைக்கு வெளியுள்ள ஓரிரண்டு நண்பர்களும் அபிமானிகளும் பணமனுப்பினர்.

அவை சில சமயங்களில் பட்டுவாடா செய்யப்படாம லும் போய்விட்டன. அவர் அப்போது நடத்தி வந்த 'கர்மயோகி' 'பால பாரதா' முதலிய பத்திரிகை களை வெளியே போகாமல் தடுத்தும், அவருக்கு வரும் 'மணியார்டர்'களைத் தடைசெய்தும் வந்தனர் பிரெஞ்சு அரசாங்கத்தார். வறுமையில் அவர் மூழ்கிக் கிடந்தார். வேறு வழியின்றிச் சேர்ந்தாற் போல் பெண்டு பிள்ளைகளுடன் சில நாட்கள் அன்ன ஆகாரமின்றி இருக்க நேரிடும். அச் சமயங்களிலும் அவரது உள்ளத்தை வறுமை வருத்தாது. இர வெல்லாம் பாடிக்கொண்டே ஆனந்தமா யிருப்பார். தாயுமானவர் பராபரக் கண்ணியை ஓயாமல் பாடு வார். அப்போது அவரது வாயிலிருந்து வருவதெல் லாம் தேசப் பேச்சும், தெய்வப் பேச்சுமா யிருக்கும். இச் சந்தர்ப்பத்தில் தான் அவரைக் கஞ்சாப் பழக் கம் பற்றிக்கொண்டது. வறுமையின் உச்சஸ் தானத்தை அவர் தமது தினசரிக் குறிப்புப் புத்தகத் தில் எழுதியுள்ள கீழ்க்கண்ட வாக்கியங்களி லிருந்து உணரலாம்.

குழந்தைக்கு ஜ்வரம். வைத்தியனுக்குக் கொடுக் கப் பணமில்லை. கடன்காரர் தொல்லையும் அத்துடன் வந்து கலந்தது. குழப்பம் குழப்பம் தீராத குழப் பம்! எத்தனை நாட்கள்! எத்தனை மாதங்கள்! எத்தனை வருஷங்கள்! செட்டிப் பணத்திற்கு எத்தனை நாள் பொய் வாயிதா சொல்லுகிறது? பொய் வாயிதா!

பொய் வாயிதா! பொய் வாயிதா! தினம் இந்தக் கொடுமைதானு? சீ சீ!

*  *  *  *  *

தாயே! என்னைக் கடன்காரர் ஓயாமல் வேதனைப் படுத்திக் கொண்டிருந்தால் நான் அரிசிக்கும், உப்புக்கும் யோசனை செய்துகொண்டிருந்தால் உன்னை எப்படிப் பாடுவேன்?

*  *  *  *  *

பாரதியார் புதுச்சேரியை விட்டு வெளியே போய்விடமாட்டார் என்ற நம்பிக்கையினுல் அவர் வறுமையில் உழன்ற போது கடைக்காரர் கடன் கொடுக்க முன் வந்தனர். அக் கடனை வெகுநாளாய்த் தீர்க்க வழியில்லாமல் இருந்ததே கடன் காரரின் உபத்திரவத்திற்குக் காரணமா யிருந்தது. வக்கீல் துரைசாமி அய்யருக்குத் தமது நண்பர் பாரதி படும் கஷ்டம் தெரிந்தது. தாம் பண வுதவி செய்த துடன் எ. ரங்கசாமி அய்யங்காருக்குப் பாரதியின் கஷ்டத்தைத் தெரிவித்துப் பொருளுதவி செய்யு மாறு வேண்டிக் கொண்டார். அப்போது தான் (1915-ம் வருடம்) அய்யங்கார் 'ஹிந்து' பத்திரி கையை விடுத்துச் சுதேசமித்திரன் நிர்வாகத்தை ஏற்றுக் கொண்டிருந்தார். அய்யங்கார் மாதாமாதம் முப்பது ரூபாய் பாரதியாருக்கு அனுப்பி வருவதாக வாக்களித்து அவ்வாறே உதவியும் செய்து வந்தார். இஷ்டப்பட்டதை எழுதி யனுப்பலா மென்றும்



புதுவையில் பாரதியாரும் அவரது மனைவி செல்லம்மாளும்.

உசிதமானதைப் பத்திரிகையில் பிரசுரிப்பதாயும் பாரதியாருக்குத் தெரிவித்தார். அதன் பிறகே அவர் சக்திதாஸன், காளிதாசன், என்ற புனைப் பெயர்களுடன் பத்திரிகைக்கு வியாசம் எழுதத் தலைப்பட்டார். 'சூரியோதயம்' என்ற வாரப் பத்திரிகைக்கும் ஆசிரியராக அமர்ந்தார். புதுச்சேரியிலிருந்த பாரதியைச் சென்னை திருமலாச்சாரியார் கண்டு 'எங்களுக்கு எவ்வளவோ செல்வமிருந்தும் கஷ்டப் படுகிறோமே! அவ்வாறிருக்க நீர் எப்படி அன்னிய தேசத்தில் வந்து இருந்து கொண்டு காலக்ஷேபம் செய்கின்றீர்?' என்று கேட்டார். அதற்குப் பாரதியார், 'கீர்த்தியை விற்றே சாப்பிட்டு வருகின்றேன்' என்று பதிலிறுத்தார். பாரதி குடும்பம் வறுமையால் கஷ்டப் படும்போது சில சமயங்களில் புதுவை முருகேசப் பிள்ளை பேருதவி செய்ததுண்டு.

## ஒற்றர் உபத்திரவம்

புதுவையில் போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரலாயிருந்தவர் ஓர் ஐரோப்பியர். அவரும் இன்னும் இதர உத்தியோகஸ்தர்களும் பாரதியாரிடம் மரியாதையாகவே நடந்து கொண்டு வந்தனர். ஆனால் ஓர் சமயம் பாரதியாரின் மாமியாருக்கும் போலீஸ் மோகுல் போடப்பட்டது. 'ஸ்திரீக்குமா மோகுல்!' என்று பாரதியார் வெகுண்டு பிரஞ்சு அரசாங்கத்தைப் பலமாகக் கண்டித்தார். அதன் பயனாக மோ

சூல் எடுபட்டு விட்டது. பாரதியார் தினமும் இரவு நேரங்களில் அரவிந்த கோஷின் வீட்டில்போய் படுப்பது வழக்கம். இச் சந்தர்ப்பத்தில் ஓர் இரவு போலீஸார் பாரதி வீட்டில் புகுந்தனர். அப்போது தான் அச்சடித்து வைத்திருக்கும் நாட்டுப் பாட்டு (தேசிய கீதங்கள்) புத்தகங்களை வாரிக் கொண்டு போயினர். ஒற்றர்கள் பாரதியின் வீட்டுக்கு எதிரில் பிரதிதினமும் இருளும் வரை காத்திருந்து யார் யார் அவரைக் காண வருகிறார்கள் என்பதைக் கண்டறிந்து போவது வழக்கம். ஒற்றர்கள் அகன்ற பிறகே பாரதியைக் காண அவரது நண்பர்கள் வருவர். அவர்களுக்கோ ஓர் பக்கம் போலீஸாரின் பயம். மற்றோர் பக்கம் பாரதியைக் காண அவா. அவரை ஓர் நாளாவது பார்க்கா விடில் பல கோடி ரூபாய் நஷ்டமடைந்தவரைப்போன்ற நிலையை அடைவர். ஆகையால் இவ்வளவு அவஸ்தைக் குள்ளாகி தலையில் முக்காடுடன் வந்து இரவு வெகுநேரங் கழித்துக் கதவைத் தட்டுவர். பாரதியார் அவ்வப்போது தொடுக்கும் கீதங்களை அவர்களிடம் பாடிக் காண்பிப்பார். உணர்ச்சி பொருந்திய பாடல்களை ரசித்து விட்டு திருப்தி யடைந்து சிறிது நேரம் அளவளாவிய பின்னர் வீடு திரும்புவர்.

## கடும் புயல்

ஓர் நாளிரவு முழுதும் பாண்டியில் கடும் புயலும் மழையும் மாறி மாறி அடித்தன. வெள்ளைக்காரத்

தெருவில் பாபு அரவிந்த கோஷனும், ஈசுவரன் தர்ம ராஜா கோவில் தெருவிலுள்ள வீடொன்றில் ஸ்ரீமான் பாரதியாரும், மற்ருென்றில் வ. வெ. சு. அய்யரும் குடியிருந்தனர். ஏறக்குறைய எல்லா வீடுகளும் புயலுக்கும் மழைக்கும் சரணுகதியடைந்து தரை யோடு தரையாய்ப் போயின. ஜனங்கள் மழை குளிர் இவற்ருல் நடுநடுங்கிப் போயினர். வ. வெ. சு. அய்யர் வீட்டில் முழங்கால் வரை ஜலம். தமது குழந்தைகளைத் தோளின் மேல் சுமந்து நின்றவண்ண மாக இரவெல்லாம் இருந்தார். பாரதியார் அதற்கு முந்தின நாள் குடி யிருந்த வீடு திடீரென்று விழுந் தது. ஆனுல் அன்று புதிதாய்க் குடி புகுந்த வீடோ அப் பெரும் புயல் மழை இவற்றை லக்ஷியம் செய்யா மல் ஒருவாறு தாங்கியது. ஆனுல் நெற்குவியல் மாத் ரம் நனைந்து விட்டது. பாரதியார் வீட்டுக் கண்ணுடி ஜன்னல்களைச் சுவற்றில் ஓயாமல் மோத வைப்பதே காற்றின் வேலையா யிருந்தது. கண்ணுடி உடைந்து தூள் படுத்திருக்கும் அவரது குழந்தைகள் மீது விழுந்தது. அப்போது அவைகளுக்கு எவ்வித ஆபத்தும் வரக் கூடாதெனப் பராசக்தியைப் பிரார்த்தித்தார். இச் சம்பவத்தால்

"காற்றடிக்குது கடல் குமுறுது" முதல்

"தீனக் குழந்தைகள் துன்பப்படா திங்கு
தேவியருள் செய்ய வேண்டுகின்ருேம்." வரை

உள்ளதோர் ஸ்வாரஸ்யமான கீதம் பிறந்தது.

நள வருஷம் கார்த்திகை மாதம் 8வ புதன் கிழமை இரவு முழுதும் பிரளய காலமாகவே இருந்து ஜனங்களுக்கு பெரிதும் பீதியை உண்டாக்கியது. பொழுது விடிந்தது. புயலும் மழையும் அஸ்தமித்தன. வெளியே வந்து பார்த்தால் ஊர் முழுதும் அலங்கோலமாகக் கிடந்தது. பாரதி, அய்யர், அரவிந்தர் முதலியோர் பண வசூல் செய்து கஷ்டப்படும் ஜனங்களுக்கு உதவினர்.

## தை மாதப் பிறப்பு

நாளை தை மாதப் பிறப்பு. பாரதியார் கையிலோ செப்புக் காசும் கிடையாது. வேண்டிய ஜனங்கள் மாதப் பிறப்பன்று வழக்கம்போல் தரிசனம் செய்து ஆசி பெற வருவார்கள். 'பால் பொங்கிற்றா?' என்று கேட்க வேண்டும். அவர்கள் "ஆம்! பால் நன்றாய்ப் பொங்கிற்று சாமி!" என்று பதில் சொல்வார்கள். அவர்களை வெறுங் கையோடு அனுப்புவது கூடாது. அது ரொம்பவும் கேவலம். காசு கொடுக்காமற் போனாலும் தாம்பூலமாவது கொடுத்து அனுப்ப வேண்டு மல்லவா? யாது செய்வதெனத் தெரியாது பாரதி தவித்துக் கொண்டிருக்கிறார். அச்சமயம் எதிர்பாராத விதமாய் அவரது சீடர்களில் ஒருவரான உத்திரவாதிச் செட்டியார் ஐந்து ரூபாய் சில்லரையைக் கொண்டு வந்து பாரதியாரிடம் சமர்ப்பித்துக் "குரோ! என் சொப்பனத்தில் பராசக்தி பிரசன்னமானாள். பாரதி பணத்திற்குக் கஷ்

டப்பட்டு மனம் புழுங்குகின்றான். அவனுக்கு உடனே பணம் கொண்டு போய்க் கொடு என்று உத்திர விட்டாள்'' என்று சொல்லி நின்றார். செட்டியாரைத் தட்டிக் கொடுத்துப் பராசக்தியின் அருளை நினைத்துப் பாரதி பரமானந்த மடைந்தார். 'மௌனவுதல்' விழாவையும் யாதொரு குறைவு மின்றி நடத்தி விட்டார்.

## குடுகுடுப்பைக்காரனும் குடும்பக் கஷ்டமும்

புதுச்சேரியில் பிச்சைக்காரர் தொல்லை அதிகம். அரிசியைப் பெற்றுக்கொண்டு அமைதியாய்ப் போகும் சுபாவம் அவர்களிடம் கிடையாது. இது வேணும் அது வேணும் என்று கேட்பார்கள். கேட்டதை வாங்கிக் கொள்ளாமல் இடத்தை விட்டு நகரமாட்டார்கள். அதிலும் நம் பாரதியார் வீட்டிற்கு வரும் பிச்சைக்காரர்களோ மூர்க்கத் தனத்தில் முதன்மை ஸ்தானம் பெற்றவர்கள். பாரதியாரின் இளகிய மனமே அவர்களின் மூர்க்க குணத்தை அதிகமாக்கக் காரணமா யிருந்தது. அவர் வீட்டுக்கு வரும் பிச்சைக்காரர்கள் அரிசி போட்டால் அதை வாங்கிக் கொள்ளாமல் "அய்யா பாரதியார் வரட்டும். அவரைப் பார்த்துவிட்டுப் போவோம்'' என்று சொல்லி மணிக் கணக்காக வேணுமானாலும் சிலை போல் நின்றிருப்பர். பாரதியின் தலையைக் கண்டார்களோ இல்லையோ, "சாமீ! துணியில்லாமே கஷ்டப்

பட்ரேனுங்க, ஒரு கந்தை யிருந்தா தாங்கோ சாமி!'' என்று சொல்லிக் காலில் விழுவர். அடுத்த விநாடியி லேயே பாரதியின் இடுப்புத் துணியைப் பிச்சைக் காரன் கையில் பார்க்கலாம். இவ்வாறு பிச்சைக் காரர்கள் துணி கேட்பதும் பாரதி கொடுப்பதும் அளவுக்கு மீறிவிட்டது.

அதனுல் அடிக்கடித் துணிபுதிதாக வாங்க நேர்ந் தது. அதைப்பற்றிப் பாரதிக்கு என்னகவலே? எந்தச் சாமான் வீட்டில் இருக்கிறது? எது இல்லே? எப்படி வாங்குவது? என்பபதைப் பற்றி அவர் சிறிதும் கவலே கொள்ளவேமாட்டார். அது அவரது வழக்க மன்று. அவருக்கு வேண்டியவைகள் அவ்வப்போது அவர் முன்னுல்வந்து தோன்றவேண்டும். அந்தப் பரா சக்தியைப் பிரார்த்தித்தால் வீட்டுப் பராசக்தி (அவ ரது மனேவி) மூலம் எப்படியாவது நிறைவேறிவிடும் என்பது அவரது நம்பிக்கை. அது எறக்குறைய உண் மையாகவே இருந்து வந்தது. குடும்பக் கஷ்டம் அறி யாது பாரதியார் அடிக்கடி வஸ்திர தானம் செய்து அதன் மூலம் தனக்குச் சிரமம் கொடுத்து வருவதை ஒருவாறு போக்கிக் கொள்ள அவர் மனேவியாகிய செல்லம்மாள் ஓர் யோசனே செய்தார். ஓர் வேஷ்டி, ஓர் சட்டை, ஓர் துண்டு மாத்திரம் அவருக்கு உடுத் திக் கொள்ளக் கொடுத்துவிட்டு மற்றவைகளே யெல் லாம் உள்ளே பத்திரப்படுத்தி விட்டார். இனி எப்படி தம் கணவர் பிச்சைக்காரர்களுக்குத் துணி

கொடுக்கப் போகிறார். பார்க்கலாம் என்று எண்ணி யிருந்தார்.

அதே தினத்தில் வழக்கமாய் வரும் ஓர் குடுகுடுப்பைக்காரன் பாரதி வீட்டுக்கு வந்து சேர்ந்தான். அரிசி போடப்பட்டது. அதை வேண்டாம் என்று சொல்லாமல் வாங்கிக்கொண்டு அங்கேயே நின்றான். வேறு வீட்டுக்குப் போகும் படி வீட்டார் நயத்திலும் பயத்திலும் சொல்லிப் பார்த்தார்கள். அவன் அவர்களின் அதட்டலுக்கு 'மசிய' வில்லை. வெகுநேரம் இருந்த இடத்தை விட்டு நகராமல் இருந்தான். கால் வலித்தது. பாரதியைக் காணோம். எதிர் வீட்டுத் திண்ணையில் போய் உட்கார்ந்து கொண்டு அவர் எப்போது வருவாரெனக் கண் கொட்டாது எதிர் பார்த்துக் கொண்டிருந்தான். கடைசியாக அவரது தரிசனமும் கிடைத்தது. பாரதிக்கும் அவன் காக்ஷி கொடுத்தான். அவனது தோற்றம் எவ்வாறிருந்த தென்பதை இங்குக் குறிப்பிட வேண்டிய தவசியம். ஏனெனில் பாரதியாரே அவனைப் பற்றிக் கீழ் வருமாறு வர்ணித் திருக்கின்றார்.

நல்ல வெள்ளைவெளேரென்ற வேஷ்டியும் சட்டையும் போட்டுக் கொண்டிருக்கின்றான். சிரசிலே சிவப்புத் துணியால் பெரிய பாகை கட்டியிருக்கின்றான். பாகையைப் பார்த்தால் நெல்லூர் அரிசி மூட்டையிலே பாதி அளவுக்கு இருக்கும். நெற்றியிலே

காலணு அளவிற்குக் குங்குமப்பொட்டு. ஆளோ நெட்டை, தடியன், காலிலே கிறுக்கு ஜோடு போட்டிருக்கின்ருன். அத்தகையோன் பாரதியாரைக் கண்டதும் உடுக்கையைப் பலவித தாள பேதங்களோடு தட்டிக்கொண்டே கீழ் வருமாறு சொல்லலுற்ருன்.

குடுகுடு குடுகுடு குடுகுடு குடுகுடு
நல்லகாலம் வருது நல்லகாலம் வருது
பாரதி அய்யாவுக்கு நல்லகாலம் வருது
தரித்திரம் போவுது ஐஸ்வர்யம் வருது
படிப்பு வளருது பாவம் தொலையுது
இருக்கிற கஷ்டமெல்லாம்
பனி போல் போவப் போவுது
பணக்கஷ்டம் பளிச்சினு போவப்போது-
சுகம் வருது-சுகம் வருது-சுகம் வருது
குடுகுடு குடுகுடு குடுகுடு குடுகுடு

உங்க பிடை கழிய பீத்தவஸ்திர மிருந்தா ஒன்னு தாங்கோ சாமீ!''

இவ்வாறு சொல்லிவிட்டு ஓர் நீண்ட கும்பிடு போட்டான். உடனேபாரதியார் தாம் உடுத்தியிருந்த உடைகளைக் கழற்றி அப்படியே அவனிடம் வீசி பெறிய அவன் சந்தோஷமாக எடுத்துச் சென்ருன். ஆனல் பாரதியார் நிர்வாணமாய் நிற்கவேண்டியதாயிற்று. அதற்காக வருந்திஞரில்லை. அவர் சுற்று முற்றும் பார்த்தார். அங்குக் குழந்தையின் அங்கி

யொன்று தற்செயலாகக் காணப்பட்டது. அதை எடுத்துக் கௌபீனமாய்ப் பாய்ச்சிக் கொண்டு நின்ருர். செல்லம்மாவுக்குச் சகல விஷயமும் தெரிந்தது. அடங்காக் கோபம் உண்டாகியது. என் செய்வாள். தன் விதியை நினைத்துக்கொண்டு வருந்தினுள். கணவரைப் பார்த்து "நீங்கள் இப்படிச் செய்வது சரியா? உங்களுக்கே நியாயமா யிருக்கிறதா?" என்ருள். அதற்கவர் "என்ன நியாயம் தப்பி நடந்து விட்டேன். நான் செய்தது முற்றிலும் சரியே" என்ருர். செல்லம்மா பார்த்தாள். "சரி! சரி! முற்றிலும் சரியா! அப்படியானுல் அவ்வாறே நிர்வாணமாய் நில்லுங்கள் எனக்கென்ன?" என்ருள். அதற்குப் பாரதியார் "செல்லம்! உனக்கே சரியானுல் எனக்கும் சரிதான்" என்று சாந்தமாகச் சொல்லி விட்டுப் பேசாம லிருந்துவிட்டார். சிறிது நேரத்திற் கெல்லாம் சதிபதிகளுக்குள் ஏற்பட்டிருந்த பிணக்கு நீங்கியது.

## நூலியற்றுதல்

புதுவை வாசத்தில் அவரது வாழ்க்கையில் பல ஏமாற்றங்களும் கஷ்டங்களும் ஏற்பட்டன. அதனுல் அவரே ஓர் முறை தமது புதுவை வாழ்க்கையை நரக மெனச் சொல்லி யிருக்கிருர். எப்படியாவது மனதைத் திடப்படுத்திக் கொள்ள வேண்டு மல்லவா? ஆகையால் எழுத்து வேலையில் இறங்கினுர். அற்புதமான பாடல்கள், வசனங்கள், கதைகள் ஏராளமாக

எழுதிக் குவித்துக் கொண்டே வந்தார். அவைகளே இப்போது கண்ணன் பாட்டு, குயில் பாட்டு, பாஞ்சாலி சபதம் முதலிய நூல்களாக வெளிவந்திருக்கின்றன. அடிக்கடி அரவிந்தர் வீடு சென்று அன்னுருடன் சேர்ந்து ரிக்வேதம் வாசித்து வந்தார். வேள்விப் பாடல்கள் அப்பொழுது தான் எழுதப்பட்டன.

பாரதியார் மாதம் இரு முறையாவது குடும்ப சகிதம் புதுவைக்கு இரண்டு மைல் தூரத்தி லுள்ள ஓர் பெரிய மாந்தோப்புக்குச் சென்று, கொண்டு போகும் பிசைந்த சாதத்தை நிலா வெளிச்சத்தில் சாப்பிட்டு இயற்கை அழகைக் கண்டு ரசித்து விட்டு வெகு நேரம் கழித்து வீடு திரும்புவார்.

வாழ்க்கையில் ஏற்பட்ட துன்பம் அவரை அதிகமாக வருத்தாதற்குக் காரணம் அரவிந்தரும், வ. வெ. சு. அய்யரும் அச்சமயம் புதுவையில் இருந்ததே. அவர்கள் கூட்டுறவினுல் மனே நிம்மதி யடைந்தார். இவ்வாறு பத்து வருட காலம் புதுவையில் இருந்து வந்தார். பிறகு தமது சொந்த நாட்டைக் காண மிக்க ஆவல் கொண்டார்.

### கூடலூரில் கைதியாதல்

தாம் புதுவைக்குப் போனது போலவே தாமே அவ்விடத்தை விட்டு வெளியேறினர். 1918-ம் வருஷம் டிசம்பர் மாதம் பிரெஞ்சு எல்லையைக் கடந்தும் பாரதியாரைப் பிரிட்டிஷ் போலீஸார் கூட

லூரில் கைது செய்தனர். ஆனால் அவர் மீது யாதொரு குற்றமும் சாட்ட முடியாமற் போகவே விடுதலை செய்தனர். பிறகு இவர் தமது மனைவி மக்களுடன் திருநெல்வேலி ஜில்லா அம்பாசமுத்திரம் தாலூகாவைச் சேர்ந்த கீழக்கடையஞ் சென்று அங்கேயே தாமதிக்கலானர்,

## கடையத்தில் பட்டபாடு

பிரிட்டிஷ் இந்தியாவிற்குள் புகுந்த சமயத்தில் ஏற்கனவே அறிமுகமா யிருந்த பலர் இவரை மறந்து விட்டனர். இளைஞர்களுக்கோ இவர் யாரென்பதே தெரியாமலிருந்தது. சகலவிதத்திலும் மாறுதலடைந் திருந்தார். உடல் மிக மெலிந்தும், மனோவலி குன்றியும் காணப்பட்டார். இந்நிலைப் பாரதியைக் காண நண்பர் முதலியோர் பெரிதும் கவலையும் வருத்தமும் கொண்டனர்.

பாரதி 1920-ம் வருடம் கீழக்கடையத்தில் உணர்ச்சி ஊட்டக் கூட்டம் கூட்டிப் பேச விரும்பித் தண்டோரா போடுவித்து வீட்டு வாயிலில் பேச ஆரம்பித்தார். இரண்டே குடியானவர்கள் இவர் பிரசங்கத்தைக் கேட்க வந்திருந்தனர். கடையத்தில் ஓர் சமயம் சாஸ்தாப்ரீதி (ஹரிஹர புத்திரனைத் திருப்தி படுத்தச் செய்யும் ஓர் உற்சவம்) நடந்தது. அப்போது சைவப் பிள்ளைமார்களுடன் உட்கார்ந்து பாரதியார் போஜனமருந்தினர். இவ்விஷயம் அக்கிரா

கார ஜனங்களுக்குத் தெரிந்தது. அவரை வீட்டில் சேர்க்கக் கூடா தென்றும் அவருக்கு உண்ண உணவு எவரும் அளிக்கக் கூடா தென்றும் அக்கிரகார வாசிகள் உத்திரவு போட்டனர். அதனால் பாரதியார் ஊருக்கு வெளியே உள்ளதோர் இடத்தில் பட்டினியாய்க் கிடக்க வேண்டி நேரிட்டது.

அவரது பெண் தங்கம்மாள் ஜலம்கொண்டு வர ஆற்றுக்குப்போனாள். அச்சமயம் பாரதி அவளைச் சந்தித்துத் தமக்குக் காப்பி கொண்டு வந்து கொடுக்குமாறு கேட்டார். அப்பெண் என் செய்வாள்பாவம்! கிராமத்தாரின் கட்டுப்பாட்டுக்கு அடங்கி நடக்க வேண்டியவளானாள். தனது அப்பாவின் பேச்சை நிறைவேற்ற முடியாது வருந்தினாள். செல்லம்மாவும் தமது கணவருக்கு உதவி செய்ய வகை யறியாது புழுங்கினாள். ஊரார்பேச்சை உல்லங்கனம்செய்யப் போதிய தைரியமில்லை. நடுநடுங்கினர். பாரதி உணவு வேண்டியும் மறுக்கப்பட்டது. மூன்று நாள் அவர் பட்டினியாகவே கிடந்தார். பசி தாளமாட்டாது தவிக்கும் பாரதியைக் கண்டு இரக்கப்பட்டு ஓர் குடியானவன் அவருக்குத் தின்பண்டம் கொண்டு வந்து கொடுத்தான். பிறகுதான் அவர் இறந்து விடுவாரோ எனப் பயந்து ஊராரும் உறவினரும் சிறிது ஆகாரம் கொடுக்க முன் வந்தனர். எனினும் ஆகாரம் ஏற்றுக் கொள்ள வில்லை. வாந்தி யெடுத்து கஷ்டத்திற் குள்ளானார்.

பாரதியார் ஓர் சிறந்த ஞானி. அவர் புதுவையை விட்டு வெளி வந்த பிறகு அவரிட மிருந்த மாறுதலை உற்றார் உறவினர் உள்ளபடி உணரவில்லை. சிலர் அவரைப் பித்து பிடித்தவன் என நினைத்தனர். அவரோ உண்மையில் ஜீவன் முக்தரா யிருந்தார். சுகமோ துக்கமோ அவரது உள்ளத்தைப் பாதிக்க வில்லை. நண்பர்கள் உதவும் பணமோ வியாசம் எழுதுவதினால் கிடைக்கும் பணமோ அவர் கையில் வெகு நேரம் தங்காது. பொழுது அஸ்தமிப்பதற்குள் தம்மிடம் உள்ள காசை யெல்லாம் சிலவழித்து விட்டு வெறுங் கையோடு நிற்பார். அவருக்குப் பணம் சேமித்து வைக்கும் சிரத்தை கிடையாது.

சமத்வம் சமத்வம்என்று பிறருக்கு உபதேசிப்ப தோடு மாத்திரம் நில்லாமல் தாமே அனுபவத்தில் நடத்திக் காட்டி வந்தார். அவர் மானிடவர்க்கத்திடம் மாத்திரம் இச் சமரச பாவத்தைக் காட்டினா ரில்லை. மிருகங்களிடமும் பறவை பக்ஷிகளிடமும் கூட அஃதே போல் நடந்து வந்தார். ஓர் நாள் கடையத் தில் ஓர் கழுதைக் குட்டி அவரது வீட்டுக் கெதிரில் மேய்ந்து கொண்டிருந்தது. அன்பு கொண்டு அதைத் தூக்கி வாரி யெடுத்து முத்த மிட்டு மகிழ்ந்தார். இந் நிகழ்ச்சியினால் அவர் கிராம வாசிகளால் அள விற்கு மீறிக் கேலி செய்யப்பட்டார்.

அவரது தாடியையும் நடையையும் பார்க்க எப்போதுமே பையன்கள் அவரைச் சூழ்ந்து கொள்

வர். அவர் எங்குச் சென்றாலும் அவர்களும் பின்னால் தொடர்ந்து செல்வர். பாரதி மாடி மீது உலாவிக் கொண்டே வேதம் உபநிஷதம் படித்துக் கொண்டிருப்பார். இவைகளை உரக்கப் படிக்கின்றானே யென்றும் இதைப் படித்து மென்ன சூத்திராளுடன் உட்கார்ந்து வெட்க மில்லாமல் சாப்பிடுகின்றானே என்றும் அக்கிரகாரத்தார் சொல்வர். எனினும் இப் பேச்சைப் பாரதி பொருட்படுத்த வில்லை. இவ்வளவு உபத்திரவத்திற்கு உள்ளாகியும் கடையம், எட்டையாபுரம், பாபவினாசம் இவ்வூர்களில் தான் இருக்க வேணுமென அப்போது அரசாங்கத்தார் கட்டுப்படுத்தியதால் பாரதி வேறெந்த ஊருக்கும் போக முடிய வில்லை. இச் சமயத்திலும் வ. ரங்கசாமி அய்யங்கார் மாதா மாதம் பாரதிக்கு முப்பது ரூபாய் அனுப்பிக் கொண்டு வந்தார்.

## மீண்டும் மித்திரன் உதவி ஆசிரியராதல்

கிழக்கடையத்தை விட்டுப் போகலாம் என்ற நிலை யேற்பட்ட பின் 1920-ம் வூ நேராகச் சென்னை சென்று ஜார்ஜ்டவுன் ராமசாமி தெருவில்வக்கில் துரைசாமி அய்யர் வீடடைந்து, அங்குத் தங்கியிருந்து மீண்டும் தரித்திரத்தின் தூண்டுதலினால் சுதேசமித்திரனில் உதவி ஆசிரியர் தொழில் எற்றார். மாதந் தோறும் நூறு ரூபாய் ஊதியமாகப் பெற்று வந்தார். ஆனால் பூரா சம்பளத்துடன் வீட்டுக்கு வந்ததே கிடையாது. வீட்டுக்கு வரும் வழியி

லேயே தான தர்மம் நடத்துவார். தேசிய மணங் கமழும் பாக்களும், கட்டுரைகளும் மித்திரன் வாயிலாக வெளி வர ஆரம்பித்தன. இவ்வமயம் கிருஸ்துவ வேதத்தைப் புது முறையில் மொழி பெயர்க்கவும் விரும்பினர், எனினும் கை கூட வில்லை.

## யானையால் காய மடைதல்

பாரதியார் திருவல்லிக்கேணிக்குத் தமது ஜாகையை மாற்றிக் கொண்டார். நாள் தவராது பார்த்தசாரதி ஸ்வாமி கோயிலுக்குச் செல்வார். கோயிலில் நுழையும் முன்பு வாசலில் கட்டியிருக்கும் யானையின் அருகில் சென்று அதற்குத் தேங்காய் பழங்கள் கொடுப்பார். யானை மிகவும் சாந்தமாக வாங்கிக் கொள்ளும். அது உண்பதைக் கண்டு மகிழ்ச்சி யடைந்த பிறகு கோயிலை, பிரதக்ஷிணம் செய்து விட்டு வீடு திரும்புவார். அவர் கோயிலுக்கு ஸ்வாமி தரிசனத்திற்குப் போகும் விதம் இது தான். யாராவது கேட்டால் அர்ச்சகன் தேங்காய் பழங்களைத் தின்பதை விட யானை தின்பதே மேலென்பார். இவ்வாறிருக்க யானைக்கு மதம் பிடித்து விட்டது. அப்போதும் வழக்கம் போல் பாரதியார் அதனருகிற் சென்று தேங்காய் பழம் கொடுக்க விரும்பினர். பாகனும் அங்கிருந்த ஜனங்களும் எவ்வளவோ சொல்லியும் கேட்டா ரில்லை. அதை அவர் லக்ஷியம் செய்யாது எப்போதும் போல் மலர்ந்த முகத்துடன் யானையின் சமீபம் சென்று

நைவேத்தியம் கொடுத்தார். அது நைவேத்தியத்தைப் பெற்றுக் கொண்டு தின்று தீர்த்த பிறகு அருகில் நின்று கொண்டிருந்த பாரதியைத் தனது துதிக்கையால் தள்ளி விட்டது. அவர் துரும்பாய் இளைத்திருந்தமையால் உருண்டு புரண்டு வீழ்ந்தார். தேகமெல்லாம் காயப்பட்டு ரத்தம் பீறிட்டோடியது. அத்துடன் ஜுரமும் வயிற்றுக் கடுப்பும் அவரைப் பற்றிக் கொண்டதனால் படுத்த படுக்கையாய் இருக்க நேரிட்டது.

## விண்ணுலகடைதல்

1921-ம் வருஷம் செப்டம்பர் 10வ தமிழ் நாட்டுச் சிறந்த வீரரான வ. வெ. சு. அய்யர் ராஜத்வேஷத்திற்காகக் கைது செய்யப்பட்டார். பாரதியார் படுத்த படுக்கையா யிருப்பதால் தாம் சிறைக்குப் போகும் முன்பு அவரைப் பார்க்க வேணுமென அய்யர் விரும்பினர். போலீஸ் அதிகாரிகள் உத்திரவின் பேரில் அய்யர் பாரதியைக்கண்டார். 'நான் சிறை சென்றுகொண்டிருக்கின்றேன்' என்று அய்யர் சொன்னவுடன் மங்கி யிருந்த பாரதியின் முகம் ஜ்வலித்தது. சுதந்திர வேட்கை கடைசி காலத்திலும் அவர் உள்ளத்தை விட்டு நீங்காம லிருந்தது. "நீ மருந்து சாப்பிட்டு உடம்பைத் தேற்றிக் கொள். மருந்து உட்கொள்ளப் பிடிவாதம் செய்யக் கூடாது' என்றார் அய்யர். அதற்குப் பாரதியார் 'நான் என் வாழ்நாளில் ஒரு ஈயுக்கோ எறும்புக்கோ மனசாலும் கெடுதி

நினைக்க வில்லை. அப்படி யிருக்க எனக்கு இந் நோயை எக்காரணம் கொண்டோ பகவான் கொடுத் திருக்கின்றான். ஆகையால் நான் அனுபவித்தே தீரு வேன்' என்றார். அய்யர் பதிலொன்றும் சொல்ல மாட்டாது விடைபெற்றுச் சிறைவாசம் ஏற்றார். பாரதிக்கு அன்றிரவு முழுதும் ரத்தம் ரத்தமாகப் பேதியாயிற்று. கடைசியில் அப் பாரதப் புதல்வர், தெய்வீகப் புலவர், சுதந்திர வீரர் தமது 38-வது வயதில் 1921-ம் வருஷம் ஸெப்டம்பர் மாதம் 11-ந் தேதி இரவு சுமார் 1-30 மணிக்குச் சென்னை திருவல் லிக்கேணி தொளசிங்க பெருமாள் கோயில் தெருவு 67-ம் நெம்பர் வீட்டில் கடைசியாக மூச்சுயிர்த்து விண்ணுலகம் சென்றார்.

## தோற்றம்

பாரதியார் நடுத்தரஉயரம் உடையவர். ஒத்தை நாடி. தலையில் பிரிமணை சுற்றியதுபோல் வால் விட்ட தலைப்பாகை. அகலமான நெற்றி காலணு அகலத்திற்குப் பொட்டு. ஒட்டிய கன்னங்கள். விசாலமான கண்கள். துடி- துடிக்கும் மீசை. பேசத் துடிக்கும் நாக்கு. பொத்தானற்ற ஷர்ட்டு. அதன் மேல் கிழிந்த அல்பாகா கோட்டு. அதில் 'ஸேப்டீ பின்' சொருகப் பட்டிருக்கும். ஜோபியில் சதா ஒரு நோட்டுப் புத்தகமும் பென்ஸிலும் அவர் நிதானமாக நடப்பதேயில்லை. ஓட்டமும் நடையும் தான் எப்போதும். அவரது கண்கள் பேரொளி

பெற்றவை. அடிக்கடி முகம் மாறிக்கொண்டே யிருக்கும். ஒரு நிமிடம் கோபம் ஜொலிக்கும். மறு நிமிடம் வாய்விட்டு அழுவார். வேறொருநிமிடம் கலகலவெனச் சிரிப்பார்.

## அவரது போக்கு

குழந்தைகளை 'ராஜா' வென்றே கூப்பிடுவார். நான் செய்வதைப் போல் செய்யாதீர்கள், சொல்வதையே செய்யுங்கள் என்பார் பாரதி. அதாவது தாம் செய்வதில் ஏதாவது கெடுதலிருக்கும், சொல்வதில் தீமையிராது என்பதே அதன் தாத்பரியம். குழைந்தைகளைப் பயமுறுத்தவே கூடாது. குழந்தைப் பருவத்திலேயே பயமுறுத்திவிட்டால் பிறகு தைரியமே வராது. அடிமை உணர்ச்சி ஆழமாகப் பதிந்துவிடும் என்பார். பூனை என்று யாராவது குழந்தைகளைப் பயமுறுத்தினுல் அவர்களைக் கோபிப்பார். குழந்தைகளைக் கூப்பிட்டுப் பக்கத்தில் உட்காரவைத்துக்கொண்டு 'பூனையும் இல்லை, பயமும் இல்லை' என்று சொல்லித் தருவார். பாரதி ராத்திரி வேளையில் குழந்தைகள் மலஜலம் கழிக்க வேண்டுமென்ருல் துணையில்லாமலேயே தனியாகப் போகும்படிச் சொல்வார். தாம் கூடவே இருப்பதாக நினைத்துத் தைரியமாயிருக்க வேண்டுமென்றும் இருட்டைக் கண்டு பயப்படக் கூடாதென்றும் சொல்லித் தருவார்.

அவரது மனது சந்தோஷிக்கும்படி யாரேனும் நடந்து கொண்டால் வைரக்கிரீடம் செய்து தருவ

தாக உடனே சொல்லி விடுவார். இளம் பெண்களா யிருந்தால் "போ! உன்னை ஜர்மன் சக்கிரவர்த்திக்கு விவாகம் செய்து வைத்து விடுகிறேன்" என்பார். தாம் சிறைசென்றோ இறந்தோ போய்விட்டால் பிழைப்பதற்கு உதவியாயிருக்கும் எனக் கூறிக் கொண்டே தமது மனைவிக்குச் சோப்பு செய்தல், தையல்வேலை, படிப்பு முதலியவைகளைச் சொல்லிக் கொடுத்தார். பரதநாட்டியம் கற்றுக்கொள்ளப் பெரிதும் விரும்பிக் காலடி போட்டுப் பழகுவார். தன் பெண்களையும் கற்றுக் கொள்ளும்படி வற்புறுத்தினர். அப்பாவுக்கு வேலையென்ன வென்று பெண்கள் நினைத்தன.

திடீரெனக் கோபம்வந்து மனைவிமக்களைத் திட்டுவார். சிறிது நேரத்திற் கெல்லாம் மனது சமாதானமாய்விடும். உடனே அவர்களை அன்பு ததும்பும் குரலில் கூப்பிட்டு "உன்னைத் திட்டிய பாரதி இறந்துவிட்டான். இப்போது உன்னைக் கூப்பிடுபவன் புதிய பாரதி. இவன்வேறு, இவன் நல்லவன்" என்று சொல்லிச் சமாதானப் படுத்துவார். ஸ்ரீராமர் முன் கோபியாம், கோபித்தால் புயற்காற்றால் குழப்பமுற்ற சமுத்திரம் போன்றும் தணிந்தால் பரமசாந்தியுடைய பாற்கடல் போன்றும் இருப்பாராம். அவரது முன் கோபத்தால் எந்த ஜீவராசிக்கும் எவ்வாபத்தும் ஏற்பட்டதில்லையாம், ராமரைப்போன்றே அவ்விஷயத்தில் நம் பாரதியாரும். அவரிடமுள்ள தப்பிதத்தை யாராவது எடுத்துக் காட்டினல் எவனுயிருப்

பினும் அவனை அன்புடன் 'கண்ணப்பா! பாண்டியா! மன்னித்துக்கொள்!' என்று வணங்குவார். அவரிடம் தாழ்ந்த குரலிலே பயந்த சுவபாவமாக யாவரும் பேசக் கூடாது. அப்படிப் பேசுபவர்களைக் 'கோழை! என் கண்முன் நில்லாதே போ வெளியே' என்பார். அனுமார் ராமரிடம் எத்தகைய பிரேமையும் அந்தரங்க பக்தியும் உடையவரோ அஃதேபோல் பாரதியார் காளியினிடத்தில். எப்போதும் தனிமையே விரும்புவார். அதில் அவர் இன்பம் கண்டு வந்தார். இயற்கை அழகில் மிகவும் ஈடுபட்டவர். விஞ்ஞான சாஸ்திரத்தில் பிரீதி உடையவர். மாலை ஞாயிறைக் கண்டு மகிழ்வதிலும் மனோஹரமான மலைத் தோற்றங்களிலும் மெய் மறந்து நின்று விடுவார். இதற்காகவே கடையத்திற்கு அரை மைல் தூரத்தி லுள்ள தட்டப்பாறை என்ற பாறை மீது மத்தியான நேரங்களில் போய் உட்காந்து கொள்வார்.

தொத்து வியாதிக்குப் பயப்படுவார். கால் அலம்பாமல் வீட்டுக்குள் எவரும் நுழையக் கூடாதென்பது அவரது கட்டளை. குத்து விளக்கும் சுவரொட்டி விளக்கும் தான் அவர் உபயோகிப்பார். ராந்தல் வெளிச்சம் மங்கலா யிருக்கும் என்பது அவரது அபிப்பிராயம். தாம் எண்ணும் காரியம் ஆகும் என்ற நம்பிக்கை அவருக்கு எப்போதும் உண்டு. ஒரு காரியத்தைத் துவக்கினல் அது முடியும் வரை குளிப்போ ஆகாரமோ அவருக்கு அவசியமேயில்லை.

சில சமயம் ஒரு மாதம் இரண்டு மாதம் சேர்ந்தாற் போல் மௌனமா யிருப்பார். அவசியமானால் எழுதித் தான் காண்பிப்பார். அப்போது பாட்டு மாத்திரம் பாடுவார்.

காவியம் எழுதும்போது அவரது தோற்றம் களிப்புற்ற யானை போன்றே யிருக்கும். அவர் எழுதும் கவிதைகளை அவ்வப்போது தமது மனைவிக்குப் படித்துக் காண்பிப்பார். அவர் கவி கட்டும் இடம் மாடி. மனைவியோ கொல்லைப் புறத்தி லுள்ள அறையில் சமையல் செய்து கொண்டிருப்பாள். பாட்டைக் கேட்க வருமாறு மாடியி லிருந்து சத்தம் போட்டழைப்பார் அவ் வம்மையை. அடுப்பில் என்ன இருந்தாலும் சரி, அப்படியே போட்டு விட்டுப் போக வேண்டும். ஒரு முறை போகத் தவறியதால் பாரதி மிகவும் கோபத்துடன் மாடியி லிருந்து கீழே இறங்கி வந்து அடுப்பில் கொதித்துக் கொண்டிருந்த குழம்பைக் கீழே கொட்டி விட்டார்.

இரக்க முள்ளவர். இவருக்குப் பல நாள் பட்டினிக்குப் பிறகு பணம் கிடைத்திருக்கும். அச்சமயம் யாரேனும் யாசித்தால் பேசாமல் கையிலுள்ள காசை அப்படியே கொடுத்து விட்டுப் பழைய பட்டினி விரதத்தை மனச் சந்துஷ்டியுடன் மேற் கொள்வார். ‘இல்லை’ யென்ற பதமே அவர் காதில் விழக் கூடாது. அரிசி இல்லை என்று சொல்லக் கூடாது. அகரம் இகரம் என்றே சொல்ல வேண்டும் என்பார்.

தமது கையில் இல்லாவிடினும் கடன் வாங்கியாவது பிறர் கஷ்டத்தைப் போக்குவார். அன்பு செலுத்துவதில் பெரியோர் சிறியோர் என்ற வித்தியாசமே இவரிடம் கிடையாது. சிறிதும் கர்வமில்லாதவர். அவரது மனைவியார் குழந்தைகளுக்குச் சாதம் போடும்போது கதை சொல்லுவது வழக்கம். அதைப் பாரதியார் மறைவா யிருந்து கேட்டுக் கொண்டிருந்தார். அதை எழுதிக் கொடுக்கச் சொல்லிக் கொஞ்சம் திருத்தி அப்படியே சுதேசமித்திரன் பத்திரிகையில் பிரசுரிக்கச் செய்தார். தாம் சிறந்த கவியாயிருந்தும் தம்மிலும் குறைவான கல்வி யுடையவர்களைக் கேவலமாக நினைக்காமல் ஊக்கப்படுத்தும் சுபாவ முடையவர் எனத் தெரிகிறது. மேற் சொன்ன கதையே 'வள்ளி பாண தீர்த்தம் ஆடினது' என்ற தலைப்பின் கீழ் மித்திரனில் வெளி வந்தது.

ஆழ்ந்த யோசனை யுடையவர். பேசும்போது குதித்துக் குதித்துப் பேசுவார். சிறிக்கும்போது உடம்பு குலுங்கும். எப்போதும் புன் சிரிப்புடன் இருப்பார். ஏதாவது வருத்த மிருந்தாலும் அதைக் குறு நகையால் மறைக்க முயற்சிப்பார்.

பாரதியார் தெருவில் அளவு பிடித்தாற்போல் காலடிகள் எடுத்து வைத்து நிமிர்ந்து நடப்பார். இதைக்கண்டு ஜனங்கள் இதோபார்! இந்தப் பைத்தியத்தை! என்று பரிகாசம் செய்வார்கள். அதை

அவர் பொருட்படுத்தவே மாட்டார். நிமிர்ந்த நன்னடையும் நேர் கொண்ட பார்வையும் என்று பாடியவர் வேறுவிதமாக எப்படி நடப்பார் என்பதை அம் முட்டாள்கள் அறியார் போலும்!

அவர் தமக்குத் தெரிந்தவர்களுக்கு நமஸ்காரம் செய்வது அடிக்க வருவதுபோ லிருக்கும். அவர் பேசுவதும் வெட்டொன்று துண்டிரண்டா யிருக்கும். அவரது இயற்கைக் குணம் அறியாதவர்கள் அவரை ஓர் சண்டைக்காரரென நினைத்து அருகில் வரவும் அஞ்சுவார்கள். அவருடன் நெருங்கிப் பழகாதவர் அவர் பெருமையை அறிவது அருமை.

அவர் எப்போதும் சுறுசுறுப்பா யிருப்பார். கோயில் திருவிழாக்களில் கலந்து கொள்வதில் ரொம்பவும் பிரியம் உண்டு. ஆனால் அவர் கலந்து கொள்ளும் விதம் வேறு. தமாஷுக்காகப் போக மாட்டார். சேவை செய்வதற்காகச் செல்வார். வாகனம் தூக்குவோருடன் சேர்ந்து தாமும் ஒருபக்கம் தோள் போட்டுக்கொண்டு போவார்.

பிராமணன் மீசை வைத்துக் கொள்வதில் தப்பில்லை என்பதற்காகவே காசியில் இருந்தபோதே மீசை வைத்துக் கொண்டார். கிராப்பும் செய்து கொண்டார். இதனால் வைதீகர்கள் இவரை ஜாதிப் பிரஷ்டம் செய்யவும் பார்த்தனர். தலை நரைக்க ஆரம்பித்து வழுக்கையும் விழவே அழகில்லாது கிராப் வைத்துக் கொள்ளக் கூடாது என்று சொல்லி

வழுங்கச்சிறைத்து அதன் அசங்கியத்தை மறைக்கத் தலைப்பாகை கட்டிக் கொள்ளத் துவக்கினர். அடிக் கடிக் கண்ணாடி பார்த்துத் தலைப்பாகை கலைந்து விட் டதா வென நோக்கிச் சீர்படுத்திக் கொண்டே யிருப் பார். சில சமயங்களில் நடு நிசியிலும் தலைப்பாகை ஒழுங்குபடுத்தும் வேலையில் முனைந்து நிற்பார்.

ஜலம் தயாராய் வைத்த பிறகு தான் அவரை குளிக்கக் கூப்பிட வேண்டும். குளிக்கும் போது யாருமே அவ்வறையின் அருகிலும் போகக் கூடாது. தலைப்பாகை உடுப்புடனே ஸ்நாந அறையில் புகுவார். குளித்து விட்டு வரும்போதும் தலைப்பாகை உடுப்புடன் தான் பார்க்க முடியும். அவர் உடம்பை யாரும் பார்க்க முடியாது. எனி னும் கடையம் வந்த பிறகு உடம்பை மறைத்துக் கொள்ள மேல் வேஷ்டி போடுவதையும் விடுத்தார். இடுப்பில் மாத்திரம் மூலக் கச்சம் வைத்து வேஷ்டி உடுத்திக் கொள்வார்.

கத்தி சிலம்பம் சுற்றுவதற்குச் சௌகரியமா யிருக்கவே சட்டை போடுவதையும் சில காலம் வரை நிறுத்தி வைத்திருந்தார். விபூதியை நன்றாகப் பூசிக் கொண்டு குங்குமத்தை நேராக இழுத்துக் கொள்வார். அது பார்ப்பதற்கு நாமம் இட்டுக் கொண்டிருப்பதுபோ லிருக்கும். வேத மந்திரங் களைச் சொல்லிச் சூரிய நமஸ்காரம் செய்யாமல் இருக்க மாட்டார்.

முதலில் செல்லம்மாவும் குழந்தைகளும் சாப்பிட்ட பிறகே தம்மை அழைக்க வேண்டும் என்பது அவரது உத்திரவு. அவர் சாதாரணமாகப் பசியில்லை யென்று தான் எப்போதும் சொல்வார். இவர் இரவு நேரங்களில் சாப்பிட நடு நிசி ஆய்விடும். ஒழுங்காய்ச் சாப்பிட மாட்டார். சாதத்தைப் பிசைந்து இப்படியும் அப்படியுமாகத் தள்ளி ஒதுக்கி விட்டு நடுவில் கொஞ்சம் எடுத்து உண்பார். சாதம் மல்லிகைப்பூ போலிருந்தால் தான் அவருக்குப் பிடிக்கும். 'தயிருடன் சேர்ந்தால் சுண்ணாம்பு நீர் மாதிரித் தோன்ற வேண்டும்' என்பாராம். களிமண் உருண்டை ஒன்றும் சாதத்தில் இருக்கக் கூடாது. வீசம்படி நெய் அளந்து பக்கத்தில் வைத்து விட வேண்டும். கெட்டியான தயிர், நல்ல வெண்ணெய் உருக்கிய நெய், தேங்காய்த்தொகையல், பொறித்த அப்பளாம், ஊர்காய் இவைகளே அவருக்கு விருப்பம். ஓட்டல் சாப்பாடு ஒருபோதும் சாப்பிடமாட்டார்.

வெற்றிலையை முதலில் குளிர்ந்த நீரிலும் பிறகு வெந்நீரிலும் நன்ருய் அலம்பிய பிறகே உபயோகிப்பார். தினமும் பதினைந்து தடவையாவது தாம்பூலம் போடுவார். இரவு நேரம் அதிகமாகத் தூங்கமாட்டார். பகலில் உண்டவுடன் சற்றே உறங்குவார். அவருக்கு நீந்தத் தெரியாது.

## கல்வி

பாரதியார் சமஸ்கிருதம், தெலுங்கு, கன்னடம், ஹிந்தி, உருது, அராபி, ஆங்கிலம், பிரஞ்சு, லத்தின் முதலிய பாஷைகளும் அறிவார். எம்மொழி பேசினாலும் சுத்தமாகவும் தெளிவாகவும் பேசுவார். பாஷைக்குக் குற்றமில்லை, எதையும் பயிலலாம் என்பார். கடைசி காலத்தில் மலையாளமும் கற்றுக் கொண்டார். எப்போதும் புத்தகங்கள் படித்துக் கொண்டே யிருப்பார்.

பாரதியார் பிரவேசப் பரீக்ஷை சென்றதோடு ஆங்கிலப் படிப்பை நிறுத்திக் கொண்டாரெனச் சொல்லலாகாது. அவர் பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயர்களுக்கு அடங்கி நடக்காவிடினும் தமது வீட்டில் சொந்த முயற்சியால் ஆங்கிலக் கவிகளின் நூல்களனைத்தையும் படித்து முடிந்தார். அவர்களுள் ஷெல்லி, கீத்ஸ், இவ்விரு கவிவாணர் மீது தான் அவர் அளவற்ற மதிப்பு வைத்திருந்தார். அவர் தமது ஊரில் ஓர் சங்கம் ஏற்படுத்தி அச் சங்கத்தில் உள்ளோருக்கு ஷெல்லியன் நூல்களைப் படித்துக் காண்பித்து அனுபவிக்கும்படிச் செய்து வந்தார். குயில் முதலிய நூல்களில் ஷெல்லியின் மணம் வீசுவதைக் கண்கூடாகக் காணலாம்.

ஓர் நாடு அடிமைப் படுவதற்குக் காரணம் கல்வியின்மையே என்பதை உணர்ந்தார். அஞ்ஞான இருள் நீங்கி ஞான வொளி ஓங்கக் கல்வி அவசியம்

ஐயமேயில்லை
ஆழ்ந்திரு[illegible]னைத்தார். தேடு கல்வியிலாத ஊரைத் த[illegible]ர யாக்கலாம் என்று சொல்லித் தமக்குக் கல்வியிலுள்ள சிரத்தையைக் காட்டிக் கொண்டிருக்கிறார். தூபதீபம் காட்டுவதா சரஸ்வதி ஆராதனை! கல்விகற்று அறிவு பெருக்குவதே! ஆகையால் வீடுதோறும் கலையின் விளக்கமும் வீதிதோறும் இரண்டொரு பள்ளியும் அவசிய மென்றார்.

செலவு தந்தைக்கோ ராயிரஞ் சென்றது
தீதெ னெக்குப் பல்லாயிரஞ் சேர்ந்தன
நலமொ ரெட்டுணையுங் கண்டி லேனிதை
நாற்ப தாயிரங் கோயிலிற் சொல்லுவேன்.

கவைக்கு உதவாத தற்காலக் கல்வி முறையைப் பற்றி அவரது அபிப்பிராயம் நோக்குவீர்! தற்காலக் கல்விமுறை தீதென நாற்பதினாயிரம் கோயில் முன் சொல்ல வந்தவர் உண்மைக் கல்வி யாதென சொல்லாமற் போகவில்லை. இதயம், கை, மூளை மூன்றும் ஒன்றினாலன்றி ஏதும் உண்மைக் கல்வி யெனப் படமாட்டாது. அன்பு, கைத்தொழில், இலக்கியம் மூன்றும் சேர்ந்தே உண்மைக் கல்வி யென்பது அவரது சிந்தாந்தம். காவியம் செய்யும்போதே நல்ல காடும் வளர்க்க வேண்டும். கலை வளர்க்கும் போது கொல்லன் உலையும் வளர்க்க வேண்டும். ஓவியம் செய்யும்போது நல்ல ஊசிகளும் செய்ய வேண்டும். உலகத் தொழில் அனைத்தையும் உவந்து செய்ய வேண்டும். ஆகா! எத்தகைய பேராவல்

பாரதிக்கு! சாதி யிரண்டொழிய வேறில்லை
தமிழ் மக்கள் சொல்லிய சொல் அமிழ்தய . .
போம். நீதி நெறியில் நின்று பிறர்க்கு உதவுபவர் நேர்மையர் - மேலவர்; கீழவர் - மற்ருேர் என்ற செந் தமிழ்க் கிழவி ஒளவையின் அன்பு நெறியையும் உளங் கவரும் வகையில் சொல்லிப் போனுர்.

## தமிழ் பற்று

அவருக்குத் தெரிந்த ஒரு பன்னிரு மொழி களில் தமிழ் மொழிபோல் இனிதாவது எங்கும் கண்டாரில்லை. தமிழ் மொழியினிடத்தில் அளவற்ற காதல் உடையவர். உலகில் உள்ள மற்றெந்த பாஷைகளுக்கும் தாழ்வாக இல்லாமல் தமிழ் தலை நிமிர்ந்து நிற்கவேண்டு மென்பதே அவரது பேரவா. தெருவி லெல்லாம் தமிழ் முழக்கம் செய்ய வேண் டும். பிற நாட்டு விவேகிகளின் நூல்களைத் தமிழில் கொணர வேண்டும். நாம் ஒருவருக் கொருவர் பழைய கதைகளையே பெருமையாகப் பேசிக் கொள் வதை விட்டுப் பிற நாட்டார் தமிழை வணங்க வேண்டுமாகில் எந்நாளும் புகழோடு திகழக்கூடிய நூல்களை இயற்றிச் சிறப்புடையதாகச் செய்ய வேண்டும் என்ருர்.

செந்தமிழ் நாடு என்ற போதே அவர் காதில் இன்பத் தேன் வந்து பாயும். அவரது பாடல்கள் தமிழ் மொழிக்குப் புதிய உயிரையும் உணர்வையும் உண்டாக்கி யிருக்கின்றன என்பதில்

ஐயமேயில்லை. அடிமைத் தனத்தில் நம் நாடு ஆழ்ந்திருப்பதற்குக் காரணம் பாஷாபிமானம் இல்லா ததே என்பதைக் கண்டறிந்து 'தமிழ்' 'தமிழ்' என்று கதறலானார். தமிழ், தமிழ், தமிழ் என்று வேகமாக உச்சரித்தால் தமிழ் அமிழ்தம் என்ற ஒலி கேட்கும் என்று ஹாஸ்யமாக ஓர் சமயம் கூறி யிருக்கின்றார். தமிழ் மொழியின் வளர்ச்சிக்காகப் பெரிதும் உழைத்தார். தமிழ் அவரது உயிர். ஓர் பாஷையை மற்றொன்றோடு கலந்து பேசுவது அவ ருக்குப் பிடிக்காது. நவீன வாலிபர்களிடம், 'பச் சைத் தமிழில் பேசு. ஆங்கிலம் கலந்த தமிழ் பேசாதே, என்று வற்புறுத்துவார். எண்ணுவதும் எழுதுவதும் அனைத்துமே தமிழாக இருக்கவேண் டும் என்பது அவரது அவா.

## கலை விருப்பம்

பாரதியார் தேட்டையான சங்கீத ஞானம் உடையவர். நாட்டை, கல்யாணி ராகங்களில் ரொம்ப வும் பிரியம் உடையவர். ராகங்களை நன்றாக ஆலா பனமும் செய்வார். எந்தப் பாட்டைப் பாடினாலும் பதச்சேத மில்லாமல் பாடவேண்டும் என்பது அவ ரது கருத்து. ஆர்மோனியத்தை உடைத்தெறிந்து வீணையை உபயோகிக்க வேண்டு மென்பார். தொண்டை சொல்லும் சங்கதியை வீணையே சொல்ல முடியும், ஆர்மோனியத்தால் முடியாது என்பார். பாடகனின் தப்பிதத்தை எடுத்துக் காட்டித் திருத்

திக் கொள்வதற்குச் சந்தர்ப்பம் அளிக்காமல் அவன் இழைக்கும் பிழையை மறைத்து விடுகிறது ஆர்மோனியம் என்பார். இரவு நேரங்களில் அவர் தம் குழந்தைகளுடன் இயற்கை யழகைக் கண்டு களிப்புடன் பாடுவார். சாப்பாடு இல்லாத சமயத்தில் சங்கீதத்தில் ஈடுபடுவதினுல் குதூகலம் உண்டு என்பார். செவிக்கு உணவில்லாதபோது சிறிது வயிற்றுக்கும் ஈயப்படும் என்ருர் வள்ளுவஞர் அந்த செழிப்பான நாட்களில். இந்தப் பஞ்சக்காலத்தில் பாரதியார் பின்னே இவ்வாறு கூருமல் என்செய்வார் பாவம்!

ஓர்முறை மௌன விரதத்தின்போது அவர் "இனி நான் கல்யாணி பாரதி என்று அழைக்கப் படும் வகையில் இன்று கல்யாணி ராகத்தைப் பாடப் போகிறேன்'' என்று எழுதிக் காண்பிக்க முயன்ருர். எப்போதும் கூடவே இருக்கும் அவரது மூத்தப் பெண் தங்கம் அரையும் குறையுமாக அவர் எழுதியதைப் பார்த்துவிட்டு, 'நீ இனி கலியாணமா பண்ணிக் கொள்ளப் போகின்ருய்?' என்று கேட்டது. அதற்கவர், 'கல்யாணம் பண்ணிக்கொள்வது மிகவும் எளிது. ஆனல் ஏற்கனவே போட்ட முடிச்சை அவிழ்க்க இரண்டு ஆனே வந்தாலும் முடியாது' என்று எழுதிக் காண்பித்தார்.

பாட்டில் அவருக்குள்ள பிரேமை அளவிட முடியாது. அதைக் கீழ்கண்ட அவரது செய்யுள் மூலம் அறியலாம். அவர் பிரம்மாவைக் குறித்து

எழுதும்போது நீரைப் படைத்தாய் நிலத்தைத் திரட்டி வைத்தாய் என்று சொல்லிவிட்டு மேற் கொண்டு,

ஆசைதருங் கோடி யதிசயங்கள் கண்டதிலே
ஓசைதரு மின்பம் உவமையிலா வின்பமன்றோ?

என்றார்.

## சமய அபிப்பிராயங்கள்

வாய் வேதாந்தம் பேசுவது பாரதிக்குப் பிடிக்காது. உலகம் பொய் என்று சொல்லிக்கொண்டு திரிபவர்கள் பித்தலாட்டக் காரர்கள் என்பதே அவரது எண்ணம். நிற்பதுவும், நடப்பதுவும், பறப்பதுவும் சொப்பனம் என்றோ, கற்பதுவும், கேட்பதுவும், கருதுவதும் மாயைகளென்றோ, வானகமும், இளவெயிலும், காட்சியும் பிழையென்றோ, காலமும், கோலமும் பொய்யென்றோ சொல்வது எவ்வாறு பொருந்தும் என்கின்றார். தந்தை வைத்துவிட்டுப் போன வயலும், தங்கச் சிலைபோல் பக்கத்தில் நிற்கும் மனைவியும், குழந்தைகளும், வீட்டில் வைத்துக் கும்பிடும் குலதெய்வமும் பொய்யா என்று வினவுகின்றார்.

அறம் பொருள் இன்பம் என்ற மூன்றிலும் தெய்வ ஒளி கண்டால் நான்காம் நிலையாகிய வீடு தானாகவே கிடைத்துவிடு மென்பது அவரது அபிப்பிராயம். உண்மையான வேதாந்தம் யாதென்பதை

அவரது வேதாந்தப் பாடல்கள் மூலம் தெளிவு படுத்தி யிருக்கின்றார்.

உலகத்தில் தோன்றியுள்ள சகல ஜீவராசிகளும் பிரம்மம் என்றும் ஆகையால், ஜீவராசிகளில் வித்யாசமில்லை என்றும் பொருள் படும்படியாக,

காக்கை குருவி யெங்்கள் ஜாதி—நீள்
கடலு மலையு மெங்கள் கூட்டம்

எனக் கூறியிருக்கின்றார்.

ஆதலின் நோக்குந் திசையெலாம் நாமன்றி வேறில்லை என்பதே உண்மையான வேதாந்தம். தாமே கடவுள், கடவுளே தாம் என்ற வேதாந்த சித்தாந்தத்தை உடையவர். சுத்த அறிவே சிவமென்றுரைத்தார் மேலோர். ஆதலின் எவ்வுயிரும் கடவுளின் அம்ச மன்றோ?

பயிலுமுயிர் வகைமட்டு மன்றியிங்கு
பார்க்கின்ற பொருளெல்லாந் தெய்வங்கண்டீர்,

பாரதியாரை அவரது சகோதரர் 'அண்ணா! பிராமணருக்குரிய எக்ஞோபவீதம் (பூணூல்) ஏன் தாங்கள் அணிந்து கொள்வதில்லை?' என்று ஒரு தடவை கேட்டார். அதற்கவர், 'நான் பூணூல் தரித்துக்கொண்டு விட்டால் என்னை ஒரே அடியாகப் பிராமண வகுப்பைச் சேர்ந்தவனென முத்திரை போட்டு விடுவார்கள். நான் எவ்வளவுக் கெவ்வளவு பிராமணனோ அவ்வளவுக் கவ்வளவு கிருஸ்துவன், மகம்

மதியன், யூதன்என்பதை அறிவாய். அன்பே எனது கொள்கை. அன்பே எனது மதம். அன்பை அடிப் படையாகக் கொண்டிருக்கும் எம்மதமும் சம்மதமே, என்றார்.

காவித் துணி வேண்டா
கற்றைச் சடைவேண்டா-உளந்
தொட்டு நின்றால் போதுமடா

கடவுளை உணரும் மார்க்கம் இதுவே யன்றோ?

## மாதர் முன்னேற்றம்

ஆடவர்களோடு தாம் சம்பாஷணையில் ஈடுபட் டுக் கொண்டிருக்கும் போது தமது வீட்டுப் பெண் மணிகளுக்கு ஏதேனும் காரியம் தம்மால் ஆக வேண்டி யிருந்தால், கூச்சப்பட்டுப் பதுங்கி ஒதுங் காமல் தைரியமாக வந்து அழைக்க வேண்டுமென் பது பாரதியாரின் கட்டளை.

விலகி வீட்டிலோர் பொந்தில் வளர்வதை
வீரப் பெண்கள் விரைவி லொழிப்பராம்

வீரப் பெண்கள் பொந்தில் வளர்வதை விரைவில் ஒழித்து உலக வாழ்க்கையின் நுட்பங்கள் தேரவும், பற்பல நூல்கள் கற்கவும், நாற்றிசை நாடுகள் யாவுஞ் சென்று புதுமை கொணர்ந்து நமது பாரத தேசம் ஓங்க உழைத்திடல் வேண்டும் என்றார்.

மாதர்க்கு என்ன ஒழுக்கம் வேண்டும் என்பதை யும் சொல்லி யிருக்கின்றார்.

நிமிர்ந்த நன்னடை நேர்கொண்ட பார்வையும்
நிலத்தில் யார்க்கு மஞ்சாத நெறிகளும்
திமிர்ந்த ஞானச் செருக்கும்..........

காரிய மிருக்கும்போது பெண்கள் ஆடவரோடு சம்பாஷணையில் ஈடுபட நேர்ந்தால் பாதகமில்லை யென்பார். வாலிபர்களுக்குப் பெண்கள் வேலையிடுவதானால் கெஞ்சிய மாதிரியில் இருக்கக் கூடாது. அவ்வாறு செய்தால் வாலிபர்கள் வேறு விதமாய் நினைத்து விடுவர் என்று அவர் சொல்வது வழக்கம். ஒரே புருஷன் தான் உண்டு என்பதை ஞாபகப் படுத்திக் கொள் என்று அடிக்கடி பெண்களுக்கு உபதேசம் செய்வார். வேண்டும் உரிமை அவர் தமது பெண்களுக்குக் கொடுத்திருந்தார்.

ஒரு முறை அவரது உறவினராகிய ஒரு ஸ்திரீ கதவைச் சற்றுத் திறந்து கொண்டு இடுக்கு வழியாய்த் தெருவைப் பார்த்துக் கொண்டிருந்தார். இதைக் கவனித்துக் கொண்டே வந்து விட்டார் பாரதி. அவ்வாறு செய்தால் தெருவில் போகும் புருஷர்கள் கெடுதலான பார்வையுடன் நோக்குவார்களென்றும் ஒளிந்து நிற்காமல் திறந்த வாசலில் நின்று பார்ப்பதே சாலச் சிறந்ததென்றும் சொன்னார்.

காதல் செய்யும் மனைவியே சக்தி கண்டீர்
கடவுனிலை யவளாலே யெய்த வேண்டும்

இத்தகைய பெண் தெய்வத்தை அடிமைப்படுத்தும் ஆடவர் கசடர்களுக்கு அவர் கூறுவதென்ன?

ஆணும் பெண்ணும் நிகரெனக் கொள்வதால்
அறிவி லோங்கியிவ் வையந் தழைக்குமாம்.

ஆணும் பெண்ணும் இரு கண்ணு யிருக்கும்போது,

கண்க ளிரண்டினி லொன்றைக் குத்திக்
காக்ஷி கெடுத்திடலாமோ?

என்று கேட்கின்றார். எல்லாம் வல்ல இறைவன்

பெண்ணுக்கு ஞானத்தை வைத்தான்
மண்ணுக்குள்ளே சில மூடர்—நல்ல
மாதரறிவைக் கெடுத்தார்.

என்று வருந்துகின்றார்.

பாரதியாரைக் காட்டிலும் ஸ்திரீகளின் முன்னேற்றத்தில் ஆர்வங் கொண்ட தமிழரைக் காண்பதரிது. மாதர்களை அடிமைப்படுத்திக் குரூரமாய் நடத்தி அவர்களுக்குள்ள உரிமைகளை மறுப்பது அழகல்ல என்பது அவரது அபிப்பிராயம். அவ் வபிப்பிராயத்தைத் தமது வியாசங்கள் கீதங்கள் மூலமாகப் பன்முறை வற்புறுத்தி யிருக்கின்றார்.

## விடுதலையும் சமத்வ உணர்ச்சியும்

நாட்டின் விடுதலைக்காக உடல் பொருள் ஆவி மூன்றையும் அர்ப்பணம் செய்ய வேண்டுமென்பதையும், சுவராஜ்ய வாழ்வே சுக வாழ்வு என்பதையும் அவர் உணரும்படிச் செய்தவர். அவரது உள்ளம்

சதா விடுதலையே நாடி நின்றது. பறையருக்கும் தீயருக்கும் புலையருக்கும் பரவரோடு குறவருக்கும் மறவருக்கும் சகலருக்கும் விடுதலை கோறினர். அடிமையாய் இருப்பதை விட விடுதலைக்காகப் போராடி முப்பது கோடி இந்தியரும் வீழ்வதே மேல் என்றார்.

ஜாதி மத பேதத்தை அவர் மிகவும் வெறுத்தார். அப் பேத உணர்ச்சி நாட்டு விடுதலைக்குப் பெருந் தடை யென்பதை உணர்ந்தார். சாம்பர் நிற மொரு குட்டி. கருஞ் சாந்து நிறம் ஒரு குட்டி. எந்த நிறமிருந்தாலும் அவை ஒரே தரமன்றோ! ஒரே தாய் பூனையின் குட்டிக ளன்றோ? அதுபோலவே எந்த ஜாதியா யிருந்தா லென்ன? யாவரும் பாரதத் தாயின் மக்களன்றோ?

மனித ராசிக்குப் புறம்பான இயற்கைப் பொருள்களும் மனிதருக்கு உறவெனக் கொண்டாடினர். காக்கைக் குருவிகளும், நீள்கடலும் மலைகளும் தமது கூட்டம் என்றார். ஜாதிப் பிரிவுகள் சொல்லி அதில் இது தாழ்வென்றும் அது மேலென்றும் நித்தமும் சண்டை செய்யக் கூடாது. ஜாதிக் கொடுமைகள் வேண்டாம். யாவரும் அன்பிலே செழிக்க வேண்டும் என்று அவர் கெஞ்சினர்.

நமது மக்கள் அடிமைத்தனத்திலேயே மூழ்கிக் கொண்டு விடுதலை யடைய வேணு மென்கிற விருப்பமோ முயற்சியோ இல்லாது வாளாயிருப்பதைக் கண்டு மனம் புழுங்கிக் கோபத்துடன் தமதுகவிகளில்

எத்தனையோ இடங்களில் சொல்லாமல் சொல்லி யிருக்கின்றார்.

## பாரதியின் திறமை

அவர் தேசியக் கவி மாத்திரமல்ல, குயில் கண்ணன் பாடல்கள், பாஞ்சாலி சபதம் முதலிய சிறந்த இலக்கியங்களை தோற்றுவித்த கவியாகும். அவரைத் தமிழ் மறுமலர்ச்சியின் கர்த்தா என்றே அழைக்க வேண்டும். கவிதை யுலகில் ஓர் புதிய சகாப்தத்தை ஏற்படுத்தி விட்டார். ஓர் வீரக் கவிஞன். ஆனதால் தான் அவரது உள்ளத்தி லிருந்து பொங்கி எழும் வீர மொழிகள் ஜனங்களிடையே ஆவேசத்தைக் கிளப்புகின்றன. சிருட்டி உற்சாகமும், அபார கற்பனையும், கம்பீரமான குரலும், படைத்தவர். உத்வேக மில்லாத பாக்களை அவரிடம் காண்பதரிது.

ஓர் சமயம் ஸ்ரீ. உ. வே. சுவாமிநாதய்யர் அவர்களுக்கு 'மகா மகோபாத்யாயா பட்டம் அளிக்கும் தினம் வந்தது. அன்று பாரதியார் அய்யரைப் புகழ்ந்து ஓர் பாட்டு எழுதிக்கொண்டு அக் கூட்டத்திற்குச் சென்றார். அவரது நண்பர்களில் ஒருவர் கிழவர்கள் கூட்டத்திற்கு செல்லுதல் கூடாதெனச் சொல்லவே பாரதியார் மறந்துபோன வாலிபத்தை மறுபடியும் ஞாபகப் படுத்திக்கொண்டு தாம் போகாது விடுத்தார்.

எனினும் அவர் தமது பாட்டை எட்டையாபுரம் சமஸ்தான வித்வானு யிருந்த ஸ்ரீ மகாலிங் கய்ய ரிடம் கொடுத்துவிட்டு வர அது கூட்டத்தில் படிக் கப்பட்டது. முடிவுரையில் சுவாமிநாதய்யர் அவர் கள் 'இப் பாட்டு இயற்றியவர் ஓர் பெரிய மன்னிக் கப் படாத குற்றம் இழைத்து விட்டார்' என்றார்.

அதைக் கேட்டு அங்குள்ளோர் அனைவரும், 'பாட்டில் எவ்விதமான பிழையு மில்லையே! பாரதி மீது எவ்விதம் குற்றம் சாட்ட முடியும்?' என்று நினைந்து திகைப்படைந்து ஒருவர்க் கொருவர் குசு குசுவென்று பேசிக் கொள்ளலாயினர். இதைக் கண்டு கொண்டார் அய்யர். அவர்களின் சந்தே கத்தை தெளிவிக்க வேண்டி, "வேறென்று மில்லை. பாரதியார் கவி இயற்றுவதில் மிகச் சிறந்தவ ரென எனக்களித்த வரவேற்புப் பாக்களிலிருந்தே நன்கு விளங்குகின்றது. எனினும் இத்தகைய சிறந்த கவி என்னைப்பற்றி வானமளாவப் புகழ்ந்திருப் பது தான் அவர் செய்த ஓர் பெரிய குற்றம்' என்று சொல்லி முடித்தார். பாரதியின் திறமையை அங்கு கூடி யிருந்தவர்கள் சிறந்த பண்டிதரான அய்யர் மூலம் நன்கு தெரிந்து கொண்டனர்.

## கவிதை

பாரதியார் புதிது புதிதான கருத்துக்களைக் கேட்போர் நெஞ்சம் உருகும் வகையில் பாட்டாக அமைத்தார். அவர் மனதில் தேசபக்தி என்ற

வெள்ளம் கரை புரண்டு ஓடிப் பாக்களாக வெளியே வழிந்து வந்தன.

மதலையை ரெழுப்பவுந் தாய்துயில் வாயோ?
குதலை மொழிக்கிரங் காதொரு தாயோ
கோமகளே! பெரும் பாரதர்க் கரசே!

என்று மாதாவின் திருப்பள்ளி யெழுச்சியில் பாடிய பாடல்கள் கன்னெஞ்சையும் கரைக்கும் சக்தி யுள் ளன. நம் நாட்டின் பெருமையையே சொல்லிக் கொண்டிருப்பதனுல் மாத்திரம் நம் நாட்டுக்குக் கதி மோக்ஷம் ஏற்படாதென நினைத்து நமது குறைகளை யும் எடுத்துக் காட்டி அவைகளைக் களைந்தெரிய நாம் இனிச் செய்ய வேண்டியது என்ன வென்பதைச் சில பாடல்கள் மூலம் அறிவுறுத்தி யிருக்கின்றார்.

சதையைத் துண்டு துண்டாக்கினும்
இதையத் துள்ளே யிலங்கு மஹாபக்தி யேகுமோ?

என்ற அடிகளிலிருந்து அடிமைத் தனத்தை உத றித் தள்ள அவர் எவ்வளவு ஆர்வங் கொண்டிருந் தார் என்பதையும் அவர் அதற்காக எவ்வளவு உறுதியுடன் இருந்தார் என்பதையும் காணலாம். சுதந்திர உணர்வே அவருக் கெப்போதும் இருந்து வந்தது.

அவரது கவிதைகளில் உயர்ந்த நோக்கங்களும் எண்ணங்களும், கற்பனைகளும் தொட்ட தொட்ட விடமெல்லாம் இருக்கின்றன. எத்தனையோ கவிகள்

இருந்திருக்கின்றார்கள் எனினும் இவருக்குக் கம்பனைப் போன்று ஓர் தனித்த பெருமை உண்டு. புஷ்பம் என்றால் எல்லாம் புஷ்பமாய் விடுமா? சில பார்ப்பதற்கு அழகாயிருப்பினும் மணமாயிருக்காது. ஆனால் பாரதி அழகும் மணமும் பொருந்திய கவி. அவரது கவிதை கோழைத் தனத்தையும் அற்பத் தனத்தையும் படுகுழியில் தள்ளிப் புதைக்கின்றது. கவலையையும், அவநம்பிக்கையையும் போக்கி நமதே வெற்றி என்று பறைசாற்றுகின்றன. குழந்தைகளும் எளிதில் உணரும்படியான அத்தகைய எளிய நடையில் ஆழ்ந்த பொருளுடன் விளங்குகின்றன. அவர் ஓர் அருள் பெற்ற கவி. சகல துறைகளிலும் தமது திறமையை நன்கு காட்டியுள்ளார். கவி சோபிப்பதற்கு வேண்டிய அன்பு, அழகு, நடை அனைத்தும் அவரது கவிகளில் மலிந்து கிடக்கின்றன.

அவரது கவிகளில் சுதந்திரதாகம் வெளிப்படையாகக் காண்கின்றது. கவி சமதர்மக் கொள்கையுடையவர். ஒருவன் பஞ்சபக்ஷண பரமான்னத்தைப் புசித்துக்கொண்டும், மற்றவன் பசியினால் துடித்துக் கொண்டும் இருக்கச் சகியாதவர். அங்ஙனே யேற்பட்டால் என்று நினைத்தபோதே அவர் ஆவேசத்துடன் 'தனியொருவனுக் குணவிலை யெனில் ஜகத்தினை யழித்திடுவோம்' என்றார்.

அவரது நூல்களில் படிக்கப்படிக்க தெவிட்டாத சுவையிருக்கின்றது. அவரது கவிதைகளை ஆங்

கிலக் கவிச் சிரேஷ்டர்களான கீத்ஸ், ஷெல்லி, மில்டன், ஹோமர் முதலியவர்களின் கவிகளுக்கே ஒப்பிடவேண்டும். பல பாஷைகளில் பாண்டித்ய மடைந்த வ. வெ. சு. அய்யர் ஓர் சமயம் பாரதியின் கவிதையைப் பற்றிச் சொல்லும்போது அக்ஷரலக்ஷம் பெறும் கவிகளைப் பாடிய பாரதியைத் தமிழர்கள் போற்ருததால் குயிலும் கூவவில்லை யெனக் கூறியிருக்கிருர்.

கவிக்குப் பார்க்கும் காக்ஷிகளெல்லாம் கவிகளாக அமைகின்றன. பிழைப்புக்காகக் குழல் ஊதும் பாம்பாட்டியைக் கண்டதும்,

"பாம்புப் பிடாரன் குழலூது கின்ருன்
குழலிலே இசை பிறந்ததா? தொளையிலே பிறந்ததா?
........................மூச்சிலே பிறந்ததா?

என்று ஆரம்பித்து ஓர் அழகிய உரை நடைக் கவி இயற்றிவிட்டார்.

அவரது பாடல்கள் முத்துக்கள் போன்ற வார்த்தைகளைக் கோர்த்த ஓர் அழகான மாலை. அம்மாலையைத் தமிழ்த்தாய்க்கு அன்புடன் அவர் அணிவித்திருக்கின்ருர். நமது பழைய நிலைமையையும் தற்போதைய நிலைமையையும் நமக்கு நினைவு ஊட்டுகின்றன அவரது கவிதைகள்.

பாரதி காலத்திற்கு முன்னிருந்த புலவர்கள் இயற்றிய காவியங்கள் இலக்கணப்பயிற்சி யுடையவர்

களே படித்தறிந்து அனுபவிக்கும் வகையிலிருக்கின்றன. ஆனால் நம் பாரதியார் எளிய நடையில் உயர்ந்த கருத்துக்களை அமைத்து பாமரஜனங்களும் படித்துப் பரமானந்த மடையுமாறு கவிதை இயற்றி யுள்ளார்.

அவரது கவிதைகள் தமிழ் இலக்கியத்தையும் தேசியத்தையும் துலக்கிப் பிரகாசிக்கச் செய்கின்றன. அவரது 'பாப்பா' பாட்டுகள் சிறுவர்கள் மனதில் ஜீவகாருண்யத்தையும் பிராணிகளிடத்தில் அன்பு முதலிய நற்குணங்களையும் போதிக்கின்றன.

பாரதி தமது கவித்திறத்தால் உறங்கிக்கொண்டிருந்த தேசமகா ஜனங்களைத் தட்டி யெழுப்பினர். நமது நிலையை நன்கு தெரிந்துகொண்டு அதற்கேற்ற பரிகாரத்தை எடுத்துரைத் திருக்கின்றார். அவர் பண்டிதரின் கவியாக மாத்திரமல்லாது பாமரர்களின் கவியாகவும் விளங்கினர்.

உலகத்தார் அனைவரும் சுகமாயிருக்க வேண்டும் 'சர்வோஜனா ஸுகினோபவந்து' என்ற கொள்கையையே நம் நாட்டில் தோன்றிய மகான்களும் கவிவாணர்களும் சொல்லிப் போயினர். அதே விஷயத்தை பாரதியார் தம்முடைய பஞ்சகாலத்தைப் பார்த்துக் கொதித்து,

இல்லை யென்ற கொடுமை—உலகில்
இல்லை யாக வைப்பேன்.

எனப் பொறித்தார்.

தேடிச் சோறு நிதந் தின்று—பல
சின்னஞ் சிறு கதைகள் பேசி
வேடிக்கை மனிதரைப் போலே-நான்
வீழ்வே னென்று நினைத்தாயோ?

*  *  *

எல்லா மாகிக் கலந்து நிறைந்தபின்
ஏழைமை யுண்டோடா?

என்று பாடிய பாரதியார் மற்ற மனிதர்கள் போல் அல்லாது கொடிய வறுமை தம்மை வாட்டினும் உள்ளந் தாழ்வுறாது உயரிய நோக்கமுடனேயே தமது வாழ்வை நடத்தித் திகழ்ந்தார். அதைரியமும் அவநம்பிக்கையும் அவரது அகராதியிலேயே கிடையாதென்பதும் நன்கு விளங்குகின்றது.

நாம் எத்தகைய விடுதலை அடையவேண்டும்? கவலையற்ற விடுதலையன்றோ!

விட்டு விடுதலை யாகி நிற்பா யிந்தச்
சிட்டுக் குருவியைப் போலே

*  *  *

தண்ணீர்விட் டோ வளர்த்தோம்?
சர்வேசா! இப்பயிரைக்
கண்ணீராற் காத்தோம்

என்றார் கவி பெருமான்.

விடுதலை பெற எவ்வளவு கஷ்டப்பட வேண்டியிருக்கின்றது? எத்தனைபேர் மாள வேண்டி யிருக்

கின்றது? அதனால் எத்துணைபேர் கண்ணீர் விட வேண்டி யுள்ளது? இதை எண்ணியே கண்ணீர் விட்டு விடுதலை முயற்சியின் பரிஸ்ரமத்தை எடுத் திவ்விதம் கூறினார்.

தேச பக்தியே அவரது மூச்சாக இருந்தது. கவிகளிடம் சாதாரணமாய் இராத சங்கீத ஞானமோ அவரிடம் இயற்கையாகவே அமைந்திருந்தது. மெட்டுகளில் அநேகம் அவரே கண்டு பிடித்தவை. சமயத்திற்கும் விஷயத்திற்கும் தகுந்த மாதிரி ராகங் களைத் தேர்ந்து மெட்டுகள் சிருஷ்டித்துக் கொண் டார். அதனால் தான் அவரது பாட்டுகள் உணர்ச்சி யைக் கொடுப்பதாயும் இதயத்தை இளகச் செய்வன வாயும் இருந்து மிகவும் சோபிக்கின்றன. சொல் லொழுக்கோடு இன்னிசையும் கலந்து பிரகாசிக்கின் றது. அவரது வாழ்நாட்களின் கடைசியில் சாக்தேய னாக மாறினார். எங்கும் பராசக்தியே வியாபித் திருப்பதாகக் கண்டார். அதன் பயனாகவே பராசக்தி மீது பாடல்கள் தோன்றின.

'நான்' எனும் அகங்காரத்தை வேரோடு அறுத் தெரிய வேண்டு மென்பது அவரது எண்ணம் என் பதை விளக்க

தொல்லைதரு மகப்பேயைத் தொலைக்க வேண்டும்
எளியனேன் யானெனலையெப்போது போக்கிடுவாய்

என்றார்.

அவர் மகாபாரதமும் ராமாயணமும் அடிக்கடி படித்து வந்ததினுல் கண்ணபிரான் மீது அளவிலா பிரேமை ஏற்பட்டது. அக் காரணம் பற்றியே அவர் கண்ணனையும் தம்மையும் முறையே தந்தை தாய், குரு சீடன், காதலன் காதலி, அரசன் பிரஜை, சேவகன் எஜமானன், தந்தை குழந்தை, தோழன் முதலிய நிலையில் வைத்து பாட்டியற்றச் சந்தர்ப்ப மேற்பட்டது.

அவரது கவிதை எளிமையும் இனிமையும் உடையது. வேலைக்காரர்களின் தன்மையை உரைக்கும்போது அது நன்கு புலனுகின்றது. நம் வீட்டில் வேலை அதிகமா யிருக்கும்போது வேலைக்காரர்கள் வராமல் நின்றிடுவார்கள். ஏன் வரவில்லை என்று கேட்டோ மானுல்

"பானையிலே தேளிருந்து பல்லாற் கடித்ததென்பார்
வீட்டிலே பெண்டாட்டி மேற்பூதம் வந்ததென்பார்
பாட்டியார் செத்துவிட்ட பன்னிரண்டா நாளென்
என்று பொய்யுரைப்பார்களாம். [பார்"

வேடன் ஓர் பெண்ணைப் பலாத்காரம் செய்ய வரும்போது அப் பெண் கூறுவது:—

..............................................பிறன்
"கண்ணாலஞ் செய்துவிட்ட பெண்ணை உன்றன்
கண்ணாற் பார்த்திடவுந் தகுமோ?"

குயில் பாட்டு அவர் கண்டதோர் கனவாகும். அக் கனவை நினவாக நம்பும் வகையில் அவ்வளவு

அழகாகப் பாடியிருக்கிருர். இந்நூலில் அவரது கற்பனு சக்தி எல்லையைக் கடந்து போகின்றது. சிருங்காரம் மலிந்து படிப்போருக்கு எல்லையற்ற ஆனந்தத்தைத் தருகிறது. அவரது சிறந்த காவி யங்களில் இதுவுமொன்று. இக் குயில் பாட்டு பாரதி யாரை ரவீந்திரநாத தாகூர் போன்ற கவியாக ஆக் கியது. குயில் பாட்டின் சிருங்காரம் லேசானதல்ல நல்ல மொங்தைப் பழைய கள்ளைப் பருகியவனது தலை மோடி கிருக்குவது போன்றதே.

குயிலைத் தொட்டு முத்த மிட்டதும் அது காண வில்லையாம். அதற்குப் பதிலாக அங்கோர் பெண் தோன்றினுள். அவளது கண்க ளிரண்டும் அப் படியே ஆளை விழுங்குகின்றன. அவளது விழிகளில் சொல்லி லகப்படாத கவிதை மிதக்கின்றது. முத் தைப் போன்ற வெண்மையான பல் வரிசைகளி லிருந்து நிலா வெளிப்பட்டு இதழில் வீசுகின்றது. அம்மாதின் திருமேனியை இவ்வாறு வர்ணிக்க லுற் ருர்.

கவிதையாகிய கனிபிழிந்த சாற்றினில் சங்கீதம் கூத்து இவற்றின் சாரத்தைச் சேர்த்துப் பின் இனிய அம்ருதம் பெய்து அதைக்

"காதல் வெயிலிலே காயவைத்த கட்டியினுல்
மாதவளின் மேனி வகுத்தான் பிரமனென்பேன்"

என்று அருமையான சித்திரத்தை வரைந்து யாவ ரும் மனக் குளிர்ச்சி யடையும் வண்ணம் தந்தரு ளினுர்.

தமிழருக்கு வீர உணர்ச்சி ஊட்டுவதற்கே பாஞ்சாலி சபதத்தை அவர் இயற்றினர். உணர்ச்சி யற்றவனும் பாஞ்சாலி சபதத்தைப் படிப்பானுகில் வீரா வேசத்துடன் கிளம்பிப் பாரதத்தாய்க்கு அருந் தொண்டு ஆற்றுவான் என்பது எனது துணிபு.

இயற்கையை வர்ணிப்பதில் அவர் மற்ற கவி களுக்குப் பின் வாங்கியவ ரல்ல என்பதை கீழ்வரும் வரிகளிலிருந்து அறியலாம்.

புல்லை நகையுறுத்திப் பூவை வியப்பாக்கி
மண்ணைத் தெளிவாக்கி நீரில் மலர்ச்சி தந்து
.............விந்தைசெயுஞ் சோதி யினை (சூரியன்)
...............கண்விழித்து
நான் தொழுதேன்...........................என்ருர்.

அர்ச்சுனன் திரௌபதி மடிமீது தலைவைத்துக் கணந்தோறும் நவ நவமாம் களிப்புத் தோன்றும் அந்திச் சூரியனை வர்ணிக்கின்ருன். சூரியன் எப்படி செய்யப் பட்டதாம்?

இடிவானத் தொளிமின்னல் பத்துகோடி
எடுத்தவற்றை யொன்றுபட வுருக்கிவார்த்து
முடிவான வட்டத்தைக் காளியாங்கே
மொய்குழலாய் சுழற்றுவதன் மொய்ம்புகாணுய்.

சூரியனைப் பார்க்கப் பார்க்க உமாதேவி கவிதை கள் செய்வது போன்று இருக்கின்றதாம். தீயின் குழம்புகள்! செழும்பொன் காய்ச்சி விட்ட ஓடைகள்! வெம்மை தோன்றுமே எரிந்திடும் தங்கத்தீவுகள்!

இவையெலாம் சூரிய தரிசனத்தால் பாரதியாருக்கு உண்டாகும் அதிசய கற்பனைகளே! சூரிய வர்ணனையில் கம்பனும் இவ்வளவு தூரம் எட்டிப் பார்க்கவில்லை என்று சொல்வது மிகையாகாது.

பாண்டவர்கள் மீது துரியோதனனுக்கு ஏற்பட்டிருந்த பொறாமை எனுந் தீயை எரிமலைக்கு ஒப்பிட்டிருப்பதை நாம் அவசியம் கவனித்தல் வேண்டும்.

"குன்ற மொன்று குழைவுற் றிளகிக்
காய்ந் தெழுந்து வெளிப் படல் போல."

அவர் இயற்றிய காவியங்கள், தேசிய கீதங்கள், தோத்திரப் பாடல்கள், வேதாந்தப் பாடல்கள், விநாயகர் நான்மணிமாலை, கண்ணன் பாட்டு, புதிய ஆத்திச்சூடி, பாப்பா பாட்டு, முரசு, பாரதி அறுபத்தாறு, காட்சி, குயில் பாட்டு, பாஞ்சாலி சபதம் என்பவை.

## வசன நூல்கள்

ஞானரதம், சித்தக் கடல், ஜகத் சித்தம், விடுதலை, பதஞ்சலி யோக ஸூத்ரம், வேதரிஷிகளின் கவிதை, கீதை முன்னுரை, சந்திரிகை, நவதந்திரம், தராசு முதலியவையே அவரது வசன நூல்கள்.

அவரது வசன நூல்களில் ஹாஸ்யம் எங்கும் மலிந்து கிடக்கும். 'சந்திரிகை' யிலும், 'ஞானரத'த்திலும் கீழ் வருமாறு எழுதி யிருப்பதே போதிய சான்றாகும்.

"அவருக்குச் சுமார் நாற்பது வயதுக்கு மேல் ஆக வில்லை. அதற்குள்ளே குழந்தைகளின் தொகை வலியாலும், மனைவியின் வாய் வலியாலும், தாய் தந்தையின் நோய் வலியாலும், விதவைத் தங்கையின் இளமை வலியாலும், மகாலிங்கையர் மனத் துயர் பெருகித் தலை மயிரெல்லாம் அன்னத் தூவி போல் நரைத்து விட்டது."

* * * * *

"நான் சோம்பருக்குத்தொண்டன். எனது நண்பர்களெல்லாம் புளியஞ் சோற்றுக்குத் தொண்டர்கள். சிலர் மட்டிலும் பணத் தொண்டர்கள். காலனுவின் அடியார்க்கும் அடியார்."

## மொழி பெயர்ப்பு

ஒருவர் ஒரு நூலை ஓர் பாஷையி லிருந்து மற்றொரு பாஷைக்கு மாற்ற முயற்சிப்பாரானுல் அவர் அவ்விரு பாஷைகளிலும் நல்ல ஞானமும் தேர்ச்சியும் உள்ளவரா யிருக்க வேண்டியது அவசியம். பாரதியார் தாகூரின் ஆங்கிலக் கதைகளைத் தமிழில் ஆக்கியது நோக்கின் முதலில் எழுதியது தாகூரா அல்லது பாரதியா என்று சந்தேகிக்கும் வண்ணம் இருக்கிறது. அவ்வளவு திறம்பட எழுதி யிருக்கிருர் பாரதி. ஜே. ஸி போஸின் வியாக்கியானங்கள், பாலகங்காதர திலகரின் பிரசங்கங்கள், வேத ரிஷிகளின் கவிதைகள், பதஞ்சலி யோக சூத்திரம், பகவத் கீதை இவைகளும் பிற பாஷைகளின் மொழி

பெயர்ப்பே. இதெல்லா வற்றையும் விடத் தாம் இயற்றிய தமிழ் பாடலேயே ஆங்கிலத்தில் மாற்றி யிருப்பது தான் மிகவும் விசித்திரமா யிருக்கும். அவைகள் 'மாதவன் சக்தியினைச் செய்ய' என்று லக்ஷ்மியைப்பற்றிய பாடலும், 'மணந்த பேராயா!' என்ற நாலாயிரப் பிரபந்தப் பாடலுமே. தமது பாடல்கள் தமிழ் தெரியாதவ ரிடையேயும் பரவ வேண்டுமென்பதற்காகவே இவ்வாறு செய்ய ஆரம்பித்தார். அவரது எண்ணம் பூராவாகக் கைகூடாமற் போயினும் இதனல் ஜே. எச். கஸின்ஸ் போன்றவர்கள் அவருடைய புலமைத் திறமையை அறிந்து கொள்ளச் சந்தர்ப்பம் ஏற்பட்டது.

பாரதியார் புலவர் மாத்திரமே யன்றி ஞானியும் தீர்க்கதரிசியு மாவார். ஷெல்லியின் கற்பனையும், வொர்ட்ஸ் வொர்த்தின் இயற்கை வழிபாடும் ப்ரௌனிங்கின் நம்பிக்கையும், டென்னிஸனின் எளிமையும், ஒருங்கே வாய்க்கப் பெற்ற ஓர் சிறந்த கவி, மகா கவி.

## தீர்க்கதரிசி

அவர் ஓர் சிறந்த தீர்க்கதரிசி என்பதற்கு அவரது காவியங்களே சான்ருகும். அஹிம்சையைத் தத்துவமாகக் கொண்ட ஒத்துழையாமை எனும் அறப்போர் ஆரம்பமான காலத்திலேயே இறந்துவிட்டார் பாரதி. எனினும் அவ் வியக்கத்தைப் பற்றியும் அதைத் துவக்கிய காந்தி யடிகளைப் பற்றியும்

முன்னால் சொன்ன மாதிரியே பின்னால் நிகழ்ந்தது ஆச்சரியத்தைத் தருகின்றது.

காந்தியடிகளின் அஹிம்சா தத்துவத்தைத் தெளிவுற முன்னமேயே விளக்கி யிருக்கிறார். தின்ன வரும் புலி தன்னையும் அன்போடு போற்றவேண்டு மென்றும், பராசக்தியே அவ் வுருவாக வந்திருக்கின் றாள் என்றும் ஆகையால் அவளை வணங்க வேண்டு மென்றும் சொல்லுகின்றார்.

அவர் இறந்து இரண்டு வருடம் கழித்து நாக புரியில் தேசியக் கொடிப் போராட்டம் கிளர்ந்தது. எனினும் அவர் பல வருடங்களுக்கு முன்னரே எழுதிய 'மாதாவின் துவஜம்' எனும் கொடிப்பாட்டில் பின்னர் நிழ்ந்தவாறே சொல்லி யிருக்கிறார். அதில் குறிப்பிட்டுள்ளது போல் அக்கொடியைக் காக்கத் தேசத்தின் பல் வேறு மாகாணங்களி லிருந்து பல் வேறு மதஸ்தர்களும், ஜாதியினரும் ஈடுபட்டு வெற்றி பெற்றனர். அப் பாட்டின் அடிகளை இங்குக் குறிப்பிடுகின்றேன்.

கம்பத்தின் கீழ் நிற்றல் காணீர்-எங்கும்
காணரும் வீரர் பெருந்திருக் கூட்டம்
நம்பற்குரிய ரவ்வீரர்-தங்கள்
நல்லுயி ரீந்துங் கொடியினைக் காப்பார்

அவர் மக்கள் படும் கஷ்டத்தைப் பார்த்துச் சகிக்க மாட்டாது 'முப்பது கோடி ஜனங்களின் சங்க

முழுமைக்கும் பொது உடமை' என்றார். அக்காலத்தில் எல்லாச் சொத்தையும் சமுதாயப் படுத்த வேண்டும் என்ற அபேவாதக் கொள்கையில்லை. இப்போது தான் இக்கொள்கை பிரஸ்தாபத்தி லிருக்கிறது.

## சில ருசிகரமான சம்பவங்கள்

திருநெல்வேலி ஜில்லா வாசிகள் 'ஓய்' என்று சம்போதனம் செய்வது வழக்கம். அம்மாதிரியே பாரதியார் ஓர் தடவை சென்னையில் செட்டியார் ஒருவரிடம் போய் 'ஓய்' என்று ஆரம்பித்து ஏதோ சொல்ல முற்பட்டார். செட்டியார் அவரை நோக்கி 'ஸ்வாமீ!' கோபிக்க வேண்டாம். தங்கள் சோதரியை எனக்கு விவாகம் செய்து கொடுத்திருக்கிறீர்களா என்ன என்னை 'ஓய்' என்று கூப்பிடுவதற்கு?' என்று சொன்னார். அது முதற் கொண்டு 'ஓய்' என்ற பதத்தையே அவர் உச்சரிப்பதில்லை.

*   *   *   *   *

ஓர் நாள் பாரதியின் குழந்தை (பாப்பா என்கிற சகுந்தலா) மாடியிலிருந்து கீழே வீழ்ந்து விட்டது. அதை ஓடிப்போய் எடுக்காமல் 'ஓம்தத்ஸத்; முற்றிற்று' என்று சொல்லிவிட்டுப் 'பாப்பா' என்ற பாட்டைப் பாடினார். வீழ்ந்ததினால் தனக்கேற் பட்டிருக்கும் வேதனையை மறந்து அக்குழந்தை மலர்ந்த முகத்துடன் தவழ்ந்து வரலாயிற்று.

ஓர் சமயம் பாரதியாரின் குழந்தைக்குக் கடுமை யான ஜுரம். அது அவஸ்தைப் படுவதைக் காண இவரால் சகிக்கமுடியவில்லை. தாய் தந்தையர் செய்யும் அக்கிரமம் குழந்தைகளையே பாதிக்கும் என்ற மூதுரை அவருக்கு ஞாபகம் வந்தது. அவர் உடனே தம்மிடம் குடிகொண்டிருந்த துர்க்குணமாகிய புகை யிலைபோடும் வழக்கத்தை நிறுத்தினர்.

*     *     *     *     *

ஓர் நாள் பாரதி ஹார்மோனியத்தின் கட்டை களில் பலவற்றை ஓரே தடவையில் அழுத்த அவை தாறுமாறுகச் சப்தித்தன. "ஏன் அவ்வாறு செய்கிறீர்கள்? சப்தம் காதுக்கு ரொம்பவும் அருவருப்பா யிருக்கிறது. இவ்வாறு செய்தால் ஹார்மோனியம் உடைந்து விடாதா?" என்றனர் வீட்டார். அதற்கவர் "அதெல்லாம் சரிதான். நீங்கள் குழந்தைகளைக் கோபிக்கும்போது பேசும் பேச்சுகள் என் காதுக்கு எவ்வாறிருக்கிற தென்பதையும், அப் பேச்சுக்களினுல் எவ்வாறு குழந்தைகளின் மனம் கஷ்டப் படுகிற தென்பதையும் நீங்கள் அறிந்துகொள்ள வேண்டாமோ? அதற்காகத்தான் நான் அவ்வாறு செய்தேன். குழந்தைகளின் மனமே உடையும்போது உங்கள் ஹார்மோனியம் உடைந்தால் என்ன? குடி முழுகிப் போய்விடுமா?" என்றுர்.

*     *     *     *     *

பாரதியார் மனைவி செல்லம்மா புதுவையிலிருந்த போது தமது ஹார்மோனியத்தைச் சீர்படுத்தக் கொடுத்திருந்தார்கள். பாரதி ஓர் நாள் உலாவப் போகும்போது கடைவீதியில் ஒரு குஷ்டரோகி

தம் வீட்டு ஹார்மோனியத்தைச் சீர்படுத்திக் கொண்டிருப்பதைக் கண்டார். வீட்டுக்கு வந்து அதைத் திருப்பிப் பெறக் கூடாதென மனைவிக்குத் திட்டம் செய்தார். எனினும் தனது தமையன் அருமையாக வாங்கிக் கொடுத்த வஸ்துவை இழக்கச் செல்லம்மா மனமிசைய வில்லை. புதுச்சேரியிலிருந்து பாரதி தமது குடும்பத்துடன் கடையத்திற்குப் புறப்பட வேண்டிய சமயமா யிருந்தது. அவர் தமது சாமான்களை ரயிலில் அனுப்பிவிடுமாறு நண்பர்களிடம் சொல்ல அவர்களும் ஒப்புக்கொண்டனர். பாரதியார் ஹார்மோனியத்தைப் பற்றி நண்பர்களிடம் பிரஸ்தாபிக்கவில்லை. இதை அறிந்த செல்லம்மா வீட்டுச் சாமான்களுடன் ஹார்மோனியத்தையும் அனுப்பித் தருமாறு பாரதிக்குத் தெரியாமல் நண்பர்களைக் கேட்டுக் கொண்டாள்.

சிலநாள் கழித்து ரயில் வண்டி மூலம் பாரதி விட்டுக்கு ஒரு பெரிய பார்சல் கிடைத்தது. அதை அவரே அருகிலிருந்து கொண்டு உடைக்கச் செய்தார். ஓர் சாமான் அவர் கண்ணுக்குத் தென்பட்டது. உடனே தீப்பொறி பறந்தது. 'முட்டாள்கள்! இந்தச் சனியனை இவர்களை யார் அனுப்பச் சொன்னது?' என்று முணுமுணுத்துக் கொண்டார். அவர் வெறுப்படையும் சாமான் என்ன? வேறொன்று மில்லை. குஷ்டரோகி தொட்ட அந்த 'ஹார்மோனியமே.'

உடனே அதை வீட்டுக்கு அருகிலுள்ள தோப்புக்குக் கொண்டுபோகச் செய்து மண்ணெண்ணெய் ஸ்நானம் செய்வித்த தல்லாது தீ ஸ்நானமுஞ் செய்வித்தார்! சிறிது நேரத்திற்கெல்லாம் ஹார்மோனியம் சாம்பலாயிற்று. அதன் பிறகு பார்சலில் வந்த பாத்

திரங்கள் மீதும், மண்ணெண்ணெய், சாணி, புளி, மண் முதலியவைகளை முறையே பிரயோகித்துச் சுத்தம் செய்வித்தார். பிறகே அவர் மனம் சமாதானம் அடைந்தது.

*　　*　　*　　*　　*

பாரதியின் இரண்டாவது பெண் சகுந்தலா குழந்தையா யிருக்கும்போது குஷ்டரோகத்தினல் பீடிக்கப்பட்ட ஓர் பிரபல தேசபக்தர் அவர் வீட்டிற்கு வந்து அக் குழந்தையைத் தமது மடியில் தூக்கி வைத்துக் கொண்டார்.

பாரதியார் அந்தத் தேசபக்தரை நேரில் ஒன்றும் சொல்ல மாட்டாதவராய் மிகவும் கஷ்டப் பட்டார். அன்னார் சென்றவுடன் குழந்தையை 'லோஷன்' நீரில் நன்ருய்க் குளிப்பாட்டினர். வியாதிஸ்தர் உட்கார்ந்திருந்த நாற்காலிக்கு மண்ணெண்ணெய் ஸ்நானம் செய்வித்தார். அன்னார் கால்பட்ட இடமெல்லாம் மண்ணெண்ணெய் தெளித்துத் தீப்பந்தத்தால் சுட்டார். அவர் காபி சாப்பிட்ட லோட்டாவை எறிந்துவிடச் சொன்னர்.

அவ்வாறு நிகழும் போதெல்லாம் எறியப்பட்ட லோட்டாவை வீதியில் போகும் ஜனங்கள் எடுத்துப் 'பாரதியார் வீட்டது' என்று கொண்டுவந்து கொடுப்பர். செல்லம்மாவும் 'மூச்சுக்' காட்டாமல் வாங்கிக் கொள்வார். பாரதி கண்ணுக்குப் பழைய குஷ்டரோகி தொட்ட லோட்டா காக்ஷிகொடுக்கும். இவ்வாறே அடிக்கடி எறியப்பட்ட லோட்டாக்கள் எப்படியோ வீட்டேறி வந்துகொண் டிருந்தன. இது பாரதிக்குப் பிடிக்கவில்லை. ஆகையால் அத்தகைய வஸ்துக்களைக் குழிதோண்டிப் புதைத்து வெளிக் கிளம்

பாமல் செய்ய வேண்டுமென்று கண்டிப்பாக உத்திரவு போட்டுவிட்டார். குஷ்டரோகி தொட்ட பாத்திரங்களை வீதியில் எறிவதனால் அவைகளை எடுத்துச் சென்று உபயோகிப்பவர்களுக்கும் அக்கொடிய வியாதி தொத்திக் கொள்ளுமே என்ற கவலையும் அத்துடன் ஒழிந்தது. தொத்து நோய் என்றால் அவ்வளவு பயம் பாரதிக்கு. கடவுளோ பரிசோதனைக்காக வேண்டி அவரைப் பார்க்கத் தினமும் ஒரு குஷ்டரோகியையாவது அனுப்பாமல் இருக்க மாட்டார்.

*　　*　　*　　*　　*

ஓர் கோழி புழுவைக் கொன்று தின்று சிறகடித்துக் கம்பீரமாய் நின்றது. அதே சமயம் ஒருவன் சோர்ந்து உட்கார்ந்திருந்தான். இவ்விரண்டு காக்ஷிகளையும் பாரதியார் கண்டார். ஒப்பிட்டு நோக்கி ஆறறிவு படைத்த மனிதனின் இழிந்த நிலை கண்டு அவன் மீது கோபமுற்றார்.

*　　*　　*　　*　　*

ஓர் சமயம் பாரதியாருக்குக் காரைக்குடி சங்கத்தின் மீது தைத்துப் பாட்டு எழுதிப் பாடியதற்காகச் 'சர்ஜ்' கோட்டு ஒன்று பரிசாகக் கிடைத்தது. சில நாட்கள் சென்ற பிறகு திருப்பத்தூரில் ஒருவன் குளிரால் உடல் நடுக்கத்துடன் அவஸ்தைப் படுவதைக் கண்டு மனமிரக்கங் கொண்டு அச்சட்டையைக் கழற்றி அவனுக்குக் கொடுத்து விட்டார்.

*　　*　　*　　*　　*

தாடி மீசையுடனிருந்த பாரதி தமது பெண் குழந்தைகளைப் புதுச்சேரி சமுத்திரத்திற்கு ஒரு நாள் அழைத்துச் சென்றார். குழந்தைகள் பெரிய பெரிய அலைகளைக் கண்டு பயந்து கரை நோக்கி ஓடின. அவர் குழந்தைகளைப் பின்தொடர்ந்து

பிடிக்க முயன்றார். இதைக் கண்ட அங்கிருந்த ஒரு வன் யாரோ ஒரு பேர்வழி குழந்தைகளைப் பிடித்துச் சமுத்திரத்தில் மூழ்கடித்துக் கொல்லப் பார்க்கிறு னென நினைத்தான். சமீபத்திலிருந்த போலீஸ்கார னிடம் இத் தகவலைத் தெரிவித்து அவனை அவ்விடத் திற்கு அழைத்து வந்து பாரதியை அதட்டச் செய் தான். ஆனால் கடைசியில் உண்மை வெளிப்படவே போலீஸ்காரன் வெட்கித் தலைகுனிந்து போக வேண் டியதாயிற்று.

* * * * *

ஓர் நாள் பாரதிக்கு மனோ வியாகூலம் ஏற்பட் டிருந்தது. யாரும் தம்மைத் தொந்திரவு செய்யும் படி விடக் கூடாதெனத் திட்டம் செய்து விட்டு மாடிக்குச் சென்றார். இரண்டு மணி நேரம் கழிந்தது. பிறகு கீழே இறங்கி வந்து தமக்குக் கண்ணன் தரி சனமாச்சு என்று மனைவி மக்களிடம் சொல்லி ஆனந்த பாஷ்பத்துடன், தாம் அப்போது தான் எழுதி முடித்த 'தூண்டிற் புழுவினைப் போலே' என்ற கண்ணன் பாட்டைப் பாடிக் காண்பித்தார்.

சிறிது நேரங் கழித்துக் காலஞ்சென்ற வ. வெ. சு. அய்யர் பாரதி வீட்டுக்கு வந்தார். அய்யரிடம் அப்பாட்டைப் படித்துக் காண்பித்து விட்டுச் செல் லம்மாளிடம் அதை ஏற்கனவே பாடிக் காண்பித்த தாயும், அது நன்றாயிருக்கிறதெனச் சொல்லி விட் டாள் என்றும் உரைத்தார். அதற்கு அய்யர் 'மகம்மத் நபி கடிஜாவோடு ஆலோசித்தே ஒவ்வொரு காரியமும் செய்ததைப் போன்று நீயும் பாட்டியற் றிப் பின் உன் மனைவியின் அங்கீகாரம் பெறுகின்றாய் போலும்!' என்று ஹாஸ்யமாகக் கூறினார்.

பாரதியின் கவிதைகளில் சிற்சில இடங்களில் யாப்பிலக்கண வழு இருப்பதாகச் சிலர் அபிப்பிராயங் கொண்டு தமக்குள் பேசிக் கொண்டிருந்தனர். இவ்விஷயம் பாரதியின் காதுக்கு எட்டியது. அன்னார்களை அவர் கூப்பிட்டுத், 'தமிழ் முதலா இலக்கணம் முதலா? எது?' என்ற கேள்வி விடுத்தார். தமிழே முதல் தோன்றியதெனப் பதில் கிடைத்தது. 'ரொம்ப சரி! அப்படியானல் தமிழைத் தனது இஷ்டம்போல் போக விடுங்கள். இலக்கணம் அதைப் பின்பற்றட்டும்.'' என்று பாரதியார் கணீரென்று சொன்னர். வந்தவர்கள் யாது சொல்வதென வகையறியாது வீடு திரும்பினர். தமிழின் தன்மை கூறுவதே இலக்கணம். இலக்கணம் தமிழை விழுங்கக் கூடாது என்பது அவரது கருத்து.

*    *    *    *

நமது கவிஞர் ஓர் நாள் காய்கறி கடைக்குச் சென்று ஒரு ரூபாய்க்குக் கீரைத்தண்டு வாங்கித் தாமே தலையில் சுமந்துகொண்டு வீடுவந்து சேர்ந்தார். செல்லம்மாள் கணவரின் தலைச் சுமையை இறக்கிக் "கீரை யாராவது இவ்வளவு வாங்கி வருவார்களா? வீணாகவன்றோ போய் விடும்! நமக்கு இரண்டு தண்டு இருந்தால் தலைக்குமேல் வெள்ளமாச்சே!'' என்றார். அதற்குக் கவிபெருமான், "ஆமாம்! நம் மாத்துக்கு மாத்திரம் வாங்கினல் போதுமா? எவ்வளவு குடும்பம் காய்கறி யில்லாமல் தவிக்கின்றது! அவைகளுக்கும் சேர்த்தே நான் வாங்கி வந்திருக்கிறேன்'' என்று சொல்லிக் கீரைத்தண்டுகளை எடுத்துச்சென்றுவீடுவீடாக வழங்கிக்கொண்டே போனர்.

*    *    *    *

ஒரு சமயம் பாரதி தாம் க்ஷவரம் செய்துகொள்ளப் பரியாரியை வரவழைத்தார். அவன் கத்தியைத் தீட்டிவிட்டுச் சோர்ந்தாற்போல் உட்கார்ந்திருந்தான். அவர் கோபங்கொண்டு அவனை ஓங்கி யறைந்துவிட்டார். எனினும் மறு நிமிடமே கோபம் தணிந்துவிட்டது. அவன் எப்படியிருந்தபோதிலும் "அறிந்தவனுன நான் அடித்தது தவறு" என்று சொல்லிக் கொண்டே அவன் காலில் சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்தார்.

* * * *

## பாரதியார் குடும்பம்

பாரதியாருக்குத் தங்கம், சகுந்தலா என்ற இரண்டே புதல்விகள் உண்டு. அவ் விருவரும் விவாகமாய் தத்தம் கணவருடனும் குழந்தைகளுடனும் முறையே போர்னியாவிலும், கோலாலம்பூரிலும் இருக்கின்றனர். அவரது மனைவியாரான செல்லம்மா திருநெல்வேலியைச் சேர்ந்த கடையத்தில் இருந்துகொண்டு வறுமையில் ஆழ்ந்து கிடக்கின்றார் பாவம்!

## பாரதிக்குத் தமிழரின் கடன்

பாரதியார் மேனுட்டி லெங்கேனும் பிறந்திருந்தால் அவரது ஜீவிய காலத்திலேயே பெரும் புகழ் பெற்றுப் பெருவாழ்வு வாழ்ந்திருப்பார். அடிமை நாட்டில் அடிமை புத்தியில் ஆழ்ந்த மக்களிடையே பிறந்தவ ராதலால் அன்னுரது பெருமையைப் பலர் ஜீவதசையில் அறிந்துகொள்ள முடியவில்லை. தமது நலத்தைச் சிறிதும் கருதாது தமிழருக்காகவும் தமிழ் பாஷைக்காகவும் பாடுபட்ட

அவரை வறுமையில் உழல விட்டு இன்று பெரும் பழியைச் சுமந்து நிற்கின்றோம். அதற்காக நாம் வருந்தவும் லஜ்ஜைப் படவும் வேண்டி யிருக்கிறது. ஆனால் அதைத் தீர்த்துக் கொள்ள வழி யில்லாம லில்லை.

கல்வியறி வுடையோர் அவரது நூல்களனைத் தும் வாங்கிப் படித்து அவரது எண்ணங்களை அனுப வத்தில் கொண்டுவர வேண்டும். ஆங்காங்கே அவரது பெயரால் பள்ளிகள் ஏற்படுத்தி அவரது கீதங்களைச் சிறுவர் சிறுமியருக்குப் பயிலுவிக்க வேண்டும். வருடந்தோறும் அவரது தினத்தன்று அவருடைய பாடல்களில் போட்டிவைத்து அன்னாரின் கீதங் களையே பரிசாக அளிக்கவேண்டும். குக்கிராமங்களி லும் அவரது பாடல்கள் பரவவேண்டும். சங்கீத வித் வான்கள் அவரது கீதங்களைக் கச்சேரிகளில் பாடும் படிச் செய்யவேண்டும். அவர் பெயரால் பெரிய புத் தக சாலைகள் ஏற்படுத்திச் சிறந்த தமிழ் நூல்களைச் சேகரித்து வைத்துத் தமிழை விருத்திசெய்யவேண் டும். பிறநாட்டு அறிஞரின் நூல்களைத் தமிழில் கொணர வேண்டும். நம் நாட்டின் இருளைப் போக்க அவர் ஏற்றிவைத்த விளக்காகிய கவிகளை என்றும் அணையாம லிருக்கும்படிப் பாதுகாக்கவேண்டும். அவ ரது புகழ் என்றும் புவிமிசை நிலவும்படிச் செய்தல் வேண்டும். இஃதே தமிழராகிய நாம் பாரதிக்குச் செய்ய வேண்டிய கடன்.

வாழிய செந்தமிழ் வாழ்க நற்றமிழர்
வாழிய பாரத மணித் திருநாடு.

---

திருமகள்விலாசம் பிரஸ், சென்னை:—1936.

# மகாத்மா காந்தி நூல்கள்

| | ரூ. அ. பை. |
|---|---|
| சத்திய சோதனை (முதற்பாகம்) | 1 8 0 |
| சத்திய சோதனை (இரண்டாம்பாகம்) (மகாத்மா காந்தி தம் சுய சரிதத்தை இதில் சொல்லி யிருக்கிறார்.) | 2 0 0 |
| அனாஸக்தியோகம் (பகவத்கீதைக்கு மகாத்மா எழுதிய மொழி பெயர்ப்பு.) | 0 4 0 |
| நீதிதர்மம் (ஸன்மார்க்க வாழ்விற்கு இன்றியமையாத தர்மங்களை காந்திஜீ இந்நூலில் அழகாகவும் தெளிவாகவும் போதிக்கிறார்.) | 0 2 0 |
| இல்லறமும் பிரம்மசரியமும் (கர்ப்பத்தடை முறைகளைக் கண்டித்து, இந்திரிய நிக்ரகத்தை விளக்கி, மகாத்மாஜி எழுதி யிருக்கும் உயர்ந்த கட்டுரைகள் அடங்கியது.) | 0 6 0 |
| ஆரோக்கிய வழி (சமான்யமாக ஒவ்வொருவரும் தேகாரோக்கியம் சம்பந்தமாகக் கட்டாயம் தெரிந்து கொள்ள பல விஷயங்களை இதில் காந்திஜீ விஸ்தரிக்கிறார்.) | 0 4 0 |

ஹிந்து தர்மம் 0 2 0

(ஹிந்து சமயத்தின் பற்பல அரிய தத்துவங்களை இலகுவாக எவருக்கும் மனதில் பதியத் தக்க விதமாக மகாத்மா எழுதியுள்ள பல வியாசங்கள் அடங்கியுள்ள நூல்.)

உத்தம வாழ்க்கை 0 2 0

("பகவத்கிதைபோல் பாராயணம் செய்யத் தக்க நூல் என்று" 'மாடர்ன் ரிவ்யூ' இதைப் பற்றி மதிப்புரை தந்தது. ஏர்வாடாச் சிறையினின்று சபர்மதி ஆசிரமவாசிகளுக்குச் செய்த பல அரிய உபதேசங்கள் இதில் அடங்கி யிருக்கின்றன.)

மகா தியாகம் 0 4 0

("தாழ்த்தப்பட்ட வகுப்பினராகக் கருதப் படும் ஹரிஜனங்களாகிய வாயில்லா ஜீவன்கள் வாழ வேண்டியதற்காக என் உயிரைத் தியாகம் செய்ய, முகமலர்ச்சியோடு சாக நான் தயாரா யிருக்கிறேன். சாகும் வரையில் பட்டினி கிடப்பேன்" என்று மகாத்மா காந்தியடிகள் 1932-ம் வருடம் செப்டம்பர் 13உ விரதம் பூண்ட உபவாஸ சரித்திரம்.)

கிதா போதனை 0 2 0

(ஏரவாடா சிறையிலிருந்து மகாத்மாஜி தமது ஆசிரம வாசிகளுக்கு பகவத் கிதையின் ஒவ்வொரு அத்தியாயத்தின் பேரிலும் தமது சொந்த அபிப்பிராயத்தை தெரியப்படுத்தியது. இதுவரை எவரும் எழுதாத வகையில் கிதையின் உபதேசங்களை சிறு சிறு வாக்கியங்களில் மிகவும் எளிய நடையில் எழுதி யிருக்கின்றார். ஒவ்வொரு வரியிலும் ஞானம் ததும்புகின்றது.)

# இதர நூல்கள்

மகாத்மா காந்தி — 0 4 0

(பிரஞ்சு தேசத்து பரம ஞானியும் பேரறிவு படைத்தவரும் நல்ல படிப்பாளியுமான ரோமன் ரோலண்டு எழுதிய ஜீவிய சரித்திரம்.)

இல்லற மகா ரகசியம் — 0 4 0

(உலகானுபவம் மிகவும் வாய்ந்தவரான வில்லியம் தர்ஸ்டன் என்ற அமெரிக்கர் எழுதியது. மகாத்மா காந்தியடிகள் எழுதிய மதிப்புரையுடன் கூடியது.)

சத்திய சமாஜம் — 0 4 0

('இந்தியன் எக்ஸ்பிரஸ்' ஆசிரியர் க. சந்தானம் எழுதியது. சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம், குடும்பம், சமூக லக்ஷியங்கள் இவைகளைப்பற்றி மிக்க அழகாக எழுதப்பட்டிருக்கிறது.)

பார்டோலிக் கதை — 0 12 0

(காந்தியடிகளின் காரியதரிசியான மகாதேவ தேசாய் எழுதியது. பாரதியின் சிஷ்யரான வ. ராமஸ்வாமி அய்யங்கார் மொழி பெயர்த்தது. வல்லபாய் படேல் தலைமையில் பர்டோலி வாசிகள் வரிகொடா இயக்கம் நடத்தி வெற்றி பெற்ற வரலாறு.)

அபேதவாதம் — 0 4 0

(தமிழ் நாட்டுத் தலைவர் சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் எழுதியது. அபேதவாதத்தைப்பற்றி காந்தியடிகளின் அபிப்பிராயம் உள்ளது.)

ஆறடி நிலம் 0 4 0

(காந்தியடிகளின் குருவான ருஷிய ஞானி டால்ஸ்டாய் எழுதிய கதையின் மொழி பெயர்ப்பு.)

இந்தியாவின் கடன் பொறுப்பு 0 4 0

(இது பகதூர்ஜி கமிட்டியின் அறிக்கை. இதை ஒவ்வொருவரும் படித்தறிய வேண்டியது அவசியம்.)

## சொர்க்கவாசி வ. வெ. சு. மஹரிஷி எழுதியவை

மங்கையர்க்கரசியின் காதல் கதைகள் 0 8 0

(வீர வாழ்க்கை நடத்தி வீர மரணம் எய்திய தேசபக்தர் ஸ்ரீ. வ. வெ. சு. ஐயரை அறியாத தமிழர்களில்லை. அப்பெரியார் தமிழ்த் தாய்க்கு அளித்த அன்புப் பரிசு இக்கதைப் பூங்கொத்தாகும். இந்தக் கதைகள், நவரசம் பொருந்தியவை. சிறப்பாக காதற் சுவையும் சோக ரசமும், வீர ரசமும் அவற்றில் பொங்கித் ததும்புகின்றன. ஐயர் தமது ஆன்மாவையே உருக்கி இக்கதைகளில் பெய்திருக்கிருர் என்று கூறலாம்)

குருகோவிந்த சிங்கன் 0 4 0

(இது சிக்கியர்களின் வீரத் தலைவனின் சரிதை. பால் மணம் மாருப் பாலர்கள் மதத்திற்காகவும் தேசத்துக்காகவும் உயிரைவிட்ட வரலாறு. இதைப் படிக்கும்போது மயிர்க் கூச்செறியும். வீரம் கிளம்பும் என்பதில் ஐயமேயில்லை)

செங்கோட்டை

## கிட்டப்பா மலர் பிரசுராலய வெளியீடுகள்

மலர்

ரூ. அ. பை

* 1. கிட்டப்பா சரித்திரம் (2-ம் பதிப்பு) 0 2

ஆக்கூர் அனந்தாச்சாரி எழுதியது

(தமிழ் நாடக மேடையில் கீர்த்திபெற்று விளங்கிய சங்கீத நடிகர் கிட்டப்பாவின் வாழ்க்கை வரலாறும், மனதைக் கவரும் ருசிகரமான கடிதங்களும், அவரைப் பற்றி மைசூர் சமஸ்தான வித்வான், எல். முத்தையா பாகவதர் முதலியவர்களின் அபிப்பிராயங்களும், 7 அழகான படங்களும் கொண்டது. ராவ் பகதூர் ஜட்ஜு. சம்பந்த முதலியார், சத்திய மூர்த்தி முகவுரையுடன் உள்ளது.)

* 2. டால்ஸ்டாய் சரித்திரம் 0 3 0

ஆக்கூர். அனந்தாச்சாரி எழுதியது

மகாத்மா வென உலகினரால் காந்திஜி போற்றப் படுவதற்கு மூல காரணம் ருஷிய ஞானியான டால்ஸ்டாயின் கொள்கைகளே. சகல விஷயங்களிலும் காந்திஜீ அவரை ஒத்திருக்கிறார். டால்ஸ்டாயின் நூல்களைப் படிப்பது அவசிய மெனக் காந்தி யடிகளே பன்முறை கூறி யிருக்கின்றார். காந்தி யடிகளுக்கும் டால்ஸ்டாயுக்கும் நடந்த கடிதப் போக்கு வரத்துச் செய்திகளும் படமும் கொண்டது. தமிழகத்தில் இத்தகைய நூல் இது வரை வெளி வந்ததே யில்லை. 'நவசக்தி' ஆசிரியர் திரு. வி. கல்யாண சுந்தர முதலியாரின் அணிந்துரை உள்ளது.

. கனிந்த காதல், ததும்பும் தேசபக்தி 0 2 0

ஹிந்தி பாஷையில் ஸ்ரீராம நரேச திரிபாடி எழுதிய 'மிலன்' காவியத்தின் மொழி பெயர்ப்பு. ஆக்கியோன், கம்ப ராமாயண ஆராய்ச்சியாளர் ஜமதக்னி. அன்பையும் தேச பக்தியையும் புகட்டும் சிறந்த நூல்.

. தேசிய கீதம் 0 1 0

சுலபமாகப் பாடும் வகையில் எல்லோருக்கும் பழக்கமான ராகங்களையும் மெட்டுகளையும் அமைத்து தேசபக்தர் ஜமதக்னி இயற்றிய உணர்ச்சியுள்ள கீதங்கள் அடங்கி யுள்ளன.

கவிச்சக்கரவர்த்தி சுப்ரமண்ய பாரதி சரிதம் 0 6 0

ஆக்கூர். அனந்தாச்சாரி எழுதியது

மகா மகோபாத்யாய டாக்டர். உ. வே. சுவாமிநாதய்யர் முகவுரையும், 'லோகோப காரி' பத்திராதிபரும் பாரதி நண்பருமான பரலி. சு. நெல்லையப்பரின் சிறப்புரையும் உடையது. புதுச்சேரியில் 10-வருடம் அஞ்ஞாத வாசத்தில் இருந்த போது எடுக்கப் பட்ட பாரதியாரின் படங்கள் சேர்க்கப் பட்டு அழகான பேப்பரில் அச்சிடப்பட் டிருக்கிறது. ருசிகரமான சம்பவங்கள் பல உள்ளன. 88 - பக்கங்களை உடையது.

* 6. டால்ஸ்டாயின் சிறுகதைகள்

(அச்சில்) 0

உயர்ந்த நீதிகளைப் போதிக்கும் கதைகளை பல டால்ஸ்டாய் எழுதி யிருக்கின்றார். இதுவரை தமிழ் பாஷையில் வெளி வராத கதைகளை சிறுவர்களுக் கென்றே எளிய இனிய நடையில் ஸ்ரீமான்கள் ஆக்கூர். அனந்தாச்சாரியாரும், ஜ[illegible]ணியும் எழுதியுள்ளனர்.

பாரதியாரின் போட்டோ 0



* இக்குறியுள்ள எமது வெளியீடுகள் கீழ் கண்ட[illegible] களில் கிடைக்கும். வியாபாரிகளுக்குத் தக்க கமிஷன் [illegible]கப்படும்.

1. சுதேசமித்திரன் ரயில்வே புத்தகசா[illegible]

2. B. இரத்தின நாயகர் அண்டு ஸன்ஸ்[illegible]
41, வெங்கடராமய்யர் தெ[illegible]
மின்ட் போஸ்டு, செ[illegible]

3. கே. ஆர். கலியாண ராமய்யர்,
பாரதமாதா நிலையம், ராணிப்பேட்டை

கிட்டப்பா மலர்ப் பிரசுராலயம்

செங்கோட்டை